॥ ओं ॥

# ॥ श्रीकालीविद्याक्रमः ॥

## द्वितीयोभागः

अम्बत्तूर्-राम्नगरस्थ-विमलानन्दमण्डलि निर्वाहकेन
विश्वाम्बासमुद्रं शङ्करार्येण (मेधानन्दनाथेन)
सङ्कलितः तेनैव संस्कृतः




विमलानन्दमण्डलि

राम्नगर् : : अम्बत्तूर्

 — [Rs. 165/-

First Edition - 1992

Copies : 500

**Price : Rs. 165-00**

*Copies can be had from :*

Sri. V. S. SANKARAN,
(Secretary)
Vimalananda Mandali,
53, Gopalasamy St.,
Ram Nagar,
Ambattur, Madras - 600 053.
Phone : 044-26585821 / 9940135818
Email : ambapuri@gmail.com ; vejeyv@gmail.com

Sri. R. KUNJARAMANI,
(Treasurer)
2, Devarajulu Naidu St.,
Venkatapuram,
Ambattur, Madras - 600 053.

Printed at :

ELANGO ACHUKOODAM,
166, Royapettah High Road,
Mylapore, Madras - 600 004.
Phone : 7 4 1 2 1

ஓம்

# ஸ்ரீ காலீவித்யாக்ரமம்

## இரண்டாம் பாகம்

அம்பத்தூர், ராம்நகர், விமலாநந்த மண்டலியின் நிர்வாகி (செயலாளர்)

**விச்வாம்பாள் சமுத்திரம் ஸ்ரீ சங்கரன் (மேதாநந்தநாதர்)**

அவர்களால் தொகுக்கப் பெற்று பரிசோதிக்கப் பெற்றது.




**விமலாநந்த மண்டலீ**

ராம்நகர், அம்பத்தூர் : : சென்னை - 600 053.



ஸ்ரீ காலிகாநந்த நாதர்

(ஸ்ரீ P. K. ராஜகோபால அய்யர்)



# ॥ ग्रन्थसमर्पणम् ॥

श्रीदक्षिणकालिकास्वरूपाणां मद्गुरुनाथानां
श्रीकालिकानन्दनाथश्रीचरणानां पादपद्मे
ग्रन्थोऽयं तदनुग्रहप्रफुल्लः उपहार-
तया त्रिकरणशुद्ध्या सप्रेम-
भक्तिश्रद्धं सासकृत्प्रणामं
समर्प्यते ॥

# க்ரந்த ஸமர்ப்பணம்

ஸ்ரீ தக்ஷிணகாலிகா ஸ்வரூபமான எனது குருநாதர்களான
ஸ்ரீ காலிகாநந்தநாத (ஸ்ரீ P. K. ராஜகோபால ஐயர்)
ஸ்ரீ சரணர்களின் பாதகமலங்களில் அவர்களது
அநுக்ரஹத்தால் மலர்ந்துள்ள இந்நூல் அடியே
னுடைய அன்புக்காணிக்கையாக த்ரிகரண
சுத்தியுடனும் ப்ரேமபக்தி ச்ரத்தை
யுடனும் மிகுந்த வணக்கத்துடனும்
ஸமர்ப்பிக்கப்படுகிறது.



ஸ்ரீ:

முத்ரை

ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமச்சங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிப ஜகத்குரு ஸ்ரீமச் சந்திரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாதேசாநுஸாரேண ஸ்ரீமஜ்ஜயேந்த்ரஸரஸ்வதீ ஸ்ரீபாதை:
க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: ||

அம்பத்தூர் ஸ்கந்தகான வித்யாலயத் தலைவர் பைங்காநாடு ஸ்ரீ ராஜகோபாலய்யரால் (காலிகாநந்தநாதர்) ஸம்ஸ்க்ருதத்தில் இயற்றப் பட்ட இந்த வித்யாக்ரமமானது, வைதிகரீதிப்ரதானமானது. தக்ஷிணாசார மார்க்கப்படி உள்ளது. காலீ தந்த்ரம் மந்த்ர மஹார்ணவம் இவைகளிலிருந்து பெறப்பட்டிருக்கிறது.

இந்த வித்யாக்ரமம் வடநாட்டில் ஜந்துக்களைப் பலி கொடுத்து அநுஷ்டிக்கப்படுகிறது. அந்த வழிக்கு வைதீக (வேத) மூலம் இல்லை. காமக்ரோதாதி ஆறு உட்பகைவர்களைப் பலியிடுவதையே பர்யாய பதங்களாக ஜந்துக்களைக் குறிப்பிடுகின்றன.

மேலும் தக்ஷிணகாலிகா ஸஹஸ்ரநாம அவதாரிகையில் ஸுந்தரி யினால் ப்ரார்த்திக்கப்பட்ட தக்ஷிணகாலிகை தன்னால் உண்டாக்கப்பட்ட தக்ஷிணகாலிகா ஸஹஸ்ரநாமத்தை விதிப்படி பாராயணம் செய்து கொண்டே இருந்தால், ஸுந்தரிக்குப் பூரண சக்தி உண்டாகும் என்று அநுக்ரஹித்திருக்கிறாள். அதிலிருந்து ஸுந்தரீ மேற்படி ஸஹஸ்ரநாமத்தை விதிப்படி ஓதி வருவதால், பூரணசக்தி பெறுவதாகவும் விளங்குகிறது.

இந்தக் காரணத்தாலேயே உலகத்தில் இங்குள்ள எல்லா சாக்த உபாஸகர்களும் ஸ்ரீவித்யோபாஸனையில் பூர்ண நிஷ்டையும், மஹா பயன் ஆகிய ஆனந்தத்தையும் அடைகிறார்கள்.

இந்தக்கிரமத்தில், மூலமந்த்ரம் வித்யாராஜ்ஞீ எனப்படுகிறது. எல்லா வித்யைகளிலும் சிறந்த மஹாராஜ்ஞீ (சக்ரவர்த்தினி) என்று காலீ தந்த்ரத்தில் சொல்லப்படுகிறது.

இந்த க்ரந்தத்தில் காலீ வித்யாவின் உபாஸனக்ரமம் மட்டுமன்றி இதர அநேக விஷயங்களும் சேர்க்கப்பட்டிருப்பது தெரிகிறது.

இந்த க்ரந்தம் காலீ பக்தர்களுக்கு மிகவும் உபகாரமான புத்தகம் ஆகிறது.

காலீ பக்தர்கள் குருமுகமாக எல்லா மந்த்ரங்களையும் உபதேச புரஸ்ஸரம் ஸ்வீகரித்துக் கொண்டு ஜபங்களையும், ஹோமங்களையும் அநுஷ்டித்துக் கொண்டு அதன் வாயிலாக தேவியின் அநுக்ரஹத்தைப் பெற்றவர்களாக ப்ரேயஸ்ஸையும் ஶ்ரேயஸ்ஸையும் பலனைப் பெறுவார்களாக என்று விரும்பி ஆசீர்வதிக்கின்றோம்.

யாத்ராஸ்தானம்,

பைடாண் (மஹாராஷ்டிரம்)

க்ரோதன பாத்ரபத சுத்த சதுர்தஶீ. நாராயணஸ்ம்ருதி:

(27-9-85)

(வடமொழியில் உள்ளதின் தமிழாக்கம்)



## உச்சரிப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| अ | आ | इ | ई | उ | ऊ |
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
| ऋ | ॠ | ऌ | ॡ | ए | ऐ |
| ரு | ரூ | லு | லூ | ஏ | ஐ |
| ओ | औ | अं | अः | | |
| ஓ | ஔ | அம் | அ: | | |

| | | | | |
|---|---|---|---|---|
| क | ख | ग | घ | ङ |
| க | க$_2$ | க$_3$ | க$_4$ | ங |
| च | छ | ज | झ | ञ |
| ச | ச$_2$ | ஜ$_3$ | ஜ$_4$ | ஞ |
| ट | ठ | ड | ढ | ण |
| ட | ட$_2$ | ட$_3$ | ட$_4$ | ண |
| त | थ | द | ध | न |
| த | த$_2$ | த$_3$ | த$_4$ | ந(ன) |

| | | | | |
|---|---|---|---|---|
| प | फ | ब | भ | म |
| ப | ப$_2$ | ப$_3$ | ப$_4$ | ம |
| य | र | ल | व | |
| ய | ர | ல | வ | |
| श | ष | स | ह | |
| ஶ | ஷ | ஸ | ஹ | |
| ळ | क्ष | त्र | ज्ञ | श्र |
| ள | க்ஷ | த்ர | ஜ்ஞ | ஶ்ர |

வேதமந்த்ரங்களை உச்சரிக்கும் போது அக்ஷரத்தின் கீழ் உள்ள(–) இந்தக் குறி அநுதாத்தம் (அதாவது ஶ்ருதியில் சற்று தாழ்ந்த உச்சரிப்பு) என்றும், அக்ஷரத்தின் மேல் உள்ள( ' ) இந்தக் குறி உதாத்தம் (அதாவது ஶ்ருதியில் சற்று உயர்ந்த உச்சரிப்பு) என்றும் கொள்ளவேண்டும். அக்ஷரத்திற்கு இந்தக் குறிகள் எதுவும் இல்லாமல் இருந்தால் அது ஶ்ருதியில் உயர்ந்ததும் அல்ல, தாழ்ந்ததும் அல்ல.—மத்தியில், அதாவது ஆதார ஶ்ருதியில் உச்சரிக்கவேண்டும். இதற்கு ஸ்வரிதம் என்று பெயர்.

அக்ஷரத்தின் மேல் ( " ) இந்தக் குறி இருந்தால் அதற்கு ''ப்ரசயம்'' அல்லது ''தீர்க்கஸ்வரிதம்'' என்று பெயர். இதனை 'ஸ்வரித ஸ்தானத்திலேயே சற்று நீட்டி உச்சரித்த பிறகு உதாத்த ஸ்தானத்தில் கொண்டு போய் உச்சரிக்க வேண்டும்.

அக்ஷரங்களின் இடையில் (१ँ) இக்குறி இருந்தால் அதனை ''க்ம்$_3$'' என்று உச்சரிக்க வேண்டும்.

|| க்ரீம் ||

# முன்னுரை

காலீவித்யாக்ரமம் என்னும் இந்நூலின் முதற்பாகத்தை எனது குருநாதர் ஸ்ரீ காலிகாநந்தநாதர் என்னும் பைங்காநாடு ஸ்ரீ ராஜகோபால ஐயர் அவர்கள், 1989ல் விமலாநந்த மண்டலி மூலமாக வெளியிட்டார்கள். அதன் முன்னுரையில், இந்த முறை பற்றிய விவரங்களையும், அதற்கடுத்தபடியான கட்டுரையில் இதன் லக்ஷணம்சங்களையும் விரிவாக எடுத்துரைத்திருக்கிறார்கள்.

இரண்டாம் பாகத்தில், தக்ஷிணகாலிகா பூஜை முறைகள், குமாரி காலிகா, மாத்ருகா ந்யாஸம், ஆவரண பூஜை, கட்கமாலை முதலிய பல விஷயங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தஸமஹாவித்யையில், முதல் வித்யையாகிய தக்ஷிணகாலிகாவின் உபாஸனை முறையின் முக்கியத்வமும், உபாஸனையின் சில சிறப்பு அம்சங்கள் பற்றியும் குருபாரம்பர்யத்தின் அவசியம் பற்றியும் இந்த பாகத்தில் குறிப்பிடுவது அவசியம். ஆகையால் அதுபற்றிய சில விவரங்கள் கொடுப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

2. பன்னெடுங்காலமாக பாரதத்தில் அநேக தெய்வங்கள் உபாஸிக்கப்பட்டு வருகின்றன. இவைகளில் ஆறு வழிபாடுகள் மட்டுமே வேத ஸம்பந்தமானவை என்று ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்தாபித்தார். இதனால் அவருக்கு ஷண்மத ஸ்தாபனாசாரியர் என்ற பெயரும் உண்டு. ஸ்ரீ சங்கரர் காலத்திற்குப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இந்த 6 மதங்களும் பழக்கத்திலிருந்தன. ஸ்ரீ சங்கரர் இவைகளை உண்டாக்கவில்லை. இவை ஆறும் வேதவிதிப்படி உள்ளவை என்று மட்டுமே நிறுவினார்.

3. அவர் கூறிய 6 மதங்கள் காணாபத்யம், சௌரம், சைவம், சாக்தம், கௌமாரம், வைஷ்ணவம் ஆகும். சாக்தம் எனப்படுவது சக்தி உபாஸனையாகும். கீழ்க்கண்ட காரணங்களால் சாக்தம் மற்றவற்றை விட உயர்ந்தது என்பது விளங்கும்.

(1) சிவபெருமானுக்குப் பஞ்சாக்ஷரம், நாராயணனுக்கு அஷ்டாக்ஷரம், முருகனுக்கு ஷடாக்ஷரம் என்று இப்படி பல தெய்வங்களுக்கு மூல மந்த்ரங்கள் இருக்கின்றன. இப்படி எல்லா மந்த்ரங்களும் 51 மாத்ருகைகளினால் (அ முதல் க்ஷ வரை உள்ள அக்ஷரங்கள்) ஆனவை. மாத்ருகைகளுக்கு

அதிஷ்டான தேவதை ஆதிசக்தியான தக்ஷிணகாலிகையே. இவள்தான் ஸர்வமந்த்ர ஸ்வரூபிணி. ஆகையால் மந்த்ரங்களுக்குப் பலன் கொடுப்பவள் இவளே.

(2) நாம் பல கடவுளர்களை உபாஸிக்கும் போது அவர்கள் அந்தந்த சக்திகளின் நாயகர்களாக இருப்பதாகவும், அவர்களை வழிபடுவதன் மூலம், அவர்களில் இருக்கும் சக்தியின் மாயையை நீக்க அவர்கள் அருள்வதாகவும் கோட்பாடு. தேவியோ ஸர்வதேவதைகளின் சக்தியாக விளங்குவதாலும், தேவி (பிரகிருதி) ஆகிய சக்தி இன்றி நாமரூபமுடைய சராசரங்கள் கடவுள்கள் இல்லையாதலாலும், அந்த தக்ஷிணகாலிகா ஆகிய ஆதிசக்தியை மாயையை நேரடியாக நீக்கும்படி வேண்டி அவளைத் தாயாக வழிபடுவது எளிது, சிறப்பு மட்டுமன்றி நேரடி உபாஸனையுமாகும்.

4. இந்த சக்தி உபாஸனை அதாவது சாக்தம் 10 வகையான சக்தி மூர்த்தங்களை வழிபடும் முறையைக் கொண்டிருப்பதனுல் இது ''தஸமஹா வித்யா'' எனப்படுகிறது. இந்தப்பத்தில், முதல் வித்யை ஆதிசக்தியாகிய தக்ஷிணகாலிகையையுடையது. இந்த உபாஸனையில் கணக்கற்ற வேத உபநிஷத் மந்த்ரங்கள் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. இந்த உபாஸனை தனியாக ஸூக்தம், உபநிஷத், ஸஹஸ்ரநாமம், த்ரிசதீ, அஷ்டோத்கர ஶதம், ஹ்ருதயம், கவசம், கற்பூர ஸ்தோத்ரம், க்ஷமாபனம், கீலகம், அர்க்கலம், ஆவரண பூஜை, கட்கமாலை, ஹோமம், தர்ப்பணம், சாபோத்தாரம், இதர உட்பூஜைகள் கொண்ட ஒரு கட்டுக் கோப்பான சிறந்த உபாஸனையாகத் திகழ்கிறது.

5. ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தரி, ஸ்ரீ தக்ஷிணகாலிகாவால் தோற்றுவிக்கப்பட்ட காலீ ஸஹஸ்ர நாமத்தைப் பாராயணம் செய்வதைப்பற்றிய ப்ரஸ்தாபம் ஸஹஸ்ரநாம அவதாரிகையில், பாகம் 1ல் ஏற்கனவே வந்திருக்கிறது. காலியின் உபாஸனை முக்யத்வம்பற்றி ''காமகலாவிலாஸம் சூத்ரம் 8ன்'' விளக்கமாக ஸ்ரீ G. V. சுப்ரமண்யம் என்னும் யோகேச பட்டாரகர் அருளிய வாக்குக் கீழே கொடுக்கப்படுகிறது. இவர் ஒரு சிறந்த லலிதாத்ரிபுரஸுந்தரி உபாஸகர் ஆவார்.

''ஸ்ரீவித்யா சாஸ்திரம் வித்யாராஜ்ஞீ தக்ஷிண காலிகா உபாஸனையோடு சேர்த்து உபாஸிப்பதால்தான் முழுமை அடைகிறது. அப்படியில்லையேல் முழுமையடையாது. ஏனென்ருல் ஸ்ருஷ்டிக்ரமத்தில் ஸ்ரீ மஹாத்ரிபுர ஸுந்தரிக்கு எவ்வளவு ப்ராதான்யம் உண்டோ அதே அளவுக்கு இம்மியும் குறையாமல் லயக்கிரமத்தில் ஸ்ரீவித்யாராஜ்ஞீ தக்ஷிணகாலிகைக்கும் உண்டு. தக்ஷிணகாலிகைக்கு ''த்ரிபுரஹரவது'' என்ற பெயர் உண்டு என்பது கற்பூர ஸ்தோத்திரத்திலிருந்து அறியலாம். ஒருவன் ஸ்ரீ வித்யா

சாஸ்திரத்தின் பூர்ண பிரயோசனத்தை அடைவதற்கு ஸ்ரீவித்யாராஜ்ஞியை (அதாவது தக்ஷிணகாலிகையை) உபாஸிக்காது போனால், மூடிய கதவின் வழியாக வீட்டில் நுழைவதற்குச் செய்யும் முயற்சியேயாகும்—பலனில்லை என்பது கருத்து.

சாஸ்திரங்களில் சங்கேதமாகக் குறிப்பிடப்படும் ''ஆத்யா'' என்ற பதம் ஆதிபராசக்தி ரூபியான தக்ஷிணகாலிகையையே குறிக்கும் பதமாகும். இறந்தவனையும் உயிர்ப்பிக்கக் கூடிய ம்ருதஸஞ்ஜீவினி சக்தி இந்தத் தாயின் கையில் தான் உண்டு. இந்தத் தேவியின் ஸ்வரூபத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாததாலோ அல்லது பயம் காரணமாகவோ அநேகர் இதைப் புறக் கணித்து விடுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்கதில்லை''

மேற்படி கூற்றிலிருந்து தஸமஹாவித்யையில் மற்ற 9 மூர்த்தி உபாஸனைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் கூட முடிவில் காலியின் உபாஸனையில் தான் வித்யா (சக்தி) உபாஸனையில் முழுமையடைகிறார்கள் என்று முடிவாகிறது.

6. ப்ரஹ்ம வித்யையானது குரு-சிஷ்யக் கிரமத்தில்தான் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகத் தொடர்ந்து வருகிறது.

சூத ஸம்ஹிதையில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது. ''குரு சம்பிரதாய பரம்பரையில் வராமலும், தன் குருபரம்பரை ஞானமில்லாமலும் உள்ள குருவை ஒருவன் அடைவானாயின் ஆகாசபக்ஷணத்தால் தன் பசியைத் தீர்த்துக் கொள்ள முயல்பவனாவான். விவாஹத்தில் கோத்ரம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் குருசிஷ்ய பரம்பரையில் குருபரம்பரை ஞானம்.''

மந்திர உபதேசத்தினால் குருவின் உடலிலிருந்தும் உள்ளத்திலிருந்தும் சிஷ்யன் உடலுக்கும், உள்ளத்திற்கும் ஆதிகுரு தொடங்கி ஸ்வகுரு வரை உள்ள குருமார்களின் ஆசியும், அருளும், தெய்வீகசக்தியும் பாய்கின்றது. மானிட குருவின் மூலம் ஸநாதனமான தெய்வமே பேசுகிறது. குரு உபதேசம் மூலம் மந்த்ரம் கிடைக்கிறது. மந்த்ரத்தால் தேவதை கிடைக்கிறது தேவதையால் ஸித்தி கிடைக்கிறது. மந்த்ரம் வெறும் எழுத்தென்றும், குரு மனிதன் என்றும் அலக்ஷியபுத்தி ஏற்பட்டால், மந்த்ர ஸித்தி ஏற்படாது. ஏனென்றால் மந்த்ரம் என்பது தேவதையின் பெயரோ, அடையாளமோ மட்டுமல்ல, தேவதையாகிய காலியேயாகும். ஜபத்தால், தேவதா சக்தி ஏற்பட்டு உபாஸனைகளை மேல்நிலைக்குத் தூக்கி விடுகிறது.

இதிலிருந்து உபதேசம் குரு மூலம்தான் பெறவேண்டும் என்பதும் குரு பரம்பரை ஞானம் வெகு முக்கியம் என்பதும் விளங்கும்.

7. இந்த இரண்டாம் பாகம் 120 பக்கங்கள் அச்சிட்ட நிலையில் எங்கள் குருநாதர் காலிகாநந்தநாதர் (பைங்காநாடு ராஜகோபால ஐயர்) 6-5-90 அன்று மறைந்தார். இந்த இரண்டாம் பாகத்திற்கு வேண்டிய விஷயங்களில் பெரும் பகுதியும், மற்ற பகுதிகளுக்கு குறிப்புகளும் குருநாதரால் பலகட்டங்களில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவரால் கொடுக்கப்படாத இதர விஷயங்களில் பல சாக்த நூல்கள், காலீசம்பந்தமான நூல்கள், இவைகளை ஒப்பு நோக்கி, எங்கள் சம்பிரதாயத்தையும் அநுசரித்து இந்த நூல் தயாரிக்கப்பட்டிருக்கிறது. எல்லாவற்றிற்கும் எங்கள் குருநாதரது அருளும், ஆசியும், ஸ்ரீ தக்ஷிணகாலிகையின் அநுக்ரஹமும் எனக்கு வழி காட்டியாக இருந்தன என்பதை மிகவும் பணிவன்புடன் சொல்ல விரும்புகிறேன்.

8. கந்தரனுபூதியில் ஸ்ரீ அருணகிரிநாதர் ''யாமோதிய கல்வியும் எம் அறிவும் தாமே பெற வேலவர் தந்தார்'' என்று குறிப்பிட்டது போல், எங்கள் குருநாதர் கொடுத்த இந்த உபாஸனு முறையை அவருக்கே ஸமர்ப்பணம் செய்யும் பாக்கியம் எனக்கு கிடைத்தது. இதில் நீங்கள் காணும் சிறப்புக்கள் யாவும் குருநாதரையே சாரும். குற்றங்குறை இருப்பின் என்னைச் சாரும். சுட்டிக்காட்டினல் அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்ள இயலும்.

9. இவ்வளவு உயர்ந்த உபாஸனு முறையை எல்லா சாக்தர்களும் தெரிந்து கொள்ள வேண்டிய உபாஸனு முறையை இந்த இரண்டு பாகங்களும் விவரிக்கின்றன. தஸமஹாவித்யையில் எந்த மூர்த்தத்தை வழிபடுபவர்களாக இருந்தாலும் இந்தப் புத்தகங்களை வாங்கிப் பயனடைய வேண்டும் என்று கேட்டுக் கொள்வதுடன், உலகம் முழுவதும் க்ஷேமமாக வாழ கருணைக் கடலாம் ஸ்ரீ தக்ஷிணகாலிகை அருள்பாலிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

அம்பத்தூர்,
பிரஜாபதி பால்குண அமாவாஸ்யா.
2-4-92

மேதாநந்த நாதர்
(V. S. சங்கரன்)






## श्रीकालीचक्रे—परिवारदेवताः

१. कर्मपीठे १—९ — जया, विजया, अजिता, अपराजिता, नित्या, विलासिनी, दोग्ध्री, अघोरा, मङ्गला.

२. नवकोणे ३७—४५ — उग्रा, उग्रप्रभा, दीप्ता, नीला, घना, बलाका, मात्रा, मुद्रा, अमिता.

३. षट्कोणे ४६—५१ — काली, कपालिनी, कुल्ला, कुरुकुल्ला, विरोधिनी, विप्रचित्ता.

४. बिन्दुस्थाने ५२–५४ — दक्षिणकालिका, महाकालः, भद्रात्मजः.




## காலீ சக்ரத்தில் பரிவார தேவதைகள்

| | |
|---|---|
| 1. காலீ சக்ரம், மேருவைத்தாங்கும் கூர்ம பீடத்தில் 1—9 | ஜயா, விஜயா, அஜிதா, அபராஜிதா, நித்யா விலாஸினி, தோக்த்ரீ, அகோரா, மங்களா. |
| 2. நவகோணத்தில் 37—45 | = உக்ரா, உக்ரப்ரபா, தீப்தா, நீலா, கனா, பலாகா, மாத்ரா, முத்ரா, அமிதா. |
| 3. ஷட்கோணத்தில் 46—51 | = காலீ, கபாலினீ, குல்லா, குருகுல்லா, விரோதினீ, விப்ரசித்தா. |
| 4. பிந்துஸ்தானத்தில் 52—54 | = தக்ஷிணகாலிகா, மஹாகால:, பத்ராத்மஜ:. |

## अकुल सहस्रार:




आज्ञा

## अकुलसहस्रारः

(चक्रं पश्यतु)

### I मानवौगम्—आत्मतत्वम्—त्वम्

(क्रों हूं ह्रीं ह्सौः ह्स्ख्फ्रेम्)

| | |
|---|---|
| १. गुरुः | २४ तत्वम् |
| २. परमगुरुः | १-५=पञ्चभूतानि |
| ३. परमेष्ठिगुरुः | ६-१०=पञ्चज्ञानेन्द्रियाणि |
| ४. गिरानन्दनाथः | ११-१५-पञ्चकर्मेन्द्रियाणि |
| ५. मध्यानन्दनाथः | १६-२०-पञ्चप्राणाः |
| ६. मलयाचलानन्दनाथः | २१-२४-मनस्, |
| ७. वीरेन्द्रानन्दनाथः | बुद्धिः, |
| ८. कल्हाटानन्दनाथः | अहङ्कारः चित्तम् |
| ९. भोगानन्दनाथः | (प्रकृतिः) |
| १०. कोङ्कणानन्दनाथः | |
| ११. मत्स्यानन्दनाथः | |
| १२. गोरक्षानन्दनाथः | |

### II सिद्धौगम्—विद्यातत्वम्—तत् (ओं)

| | | |
|---|---|---|
| १३. दत्तात्रेयः | २०. गौतमः | ७ - तत्वम् |
| १४. निदाघः | २१. विश्वामित्रः | १. माया |
| १५. ऋभुः | २२. भरद्वाजः | २. कला |
| १६. अगस्त्यः | २३. अत्रिः | ३. अविद्या |
| १७. शुकः | २४. कश्यपः | ४. अरागः |
| १८. वसिष्टः | | ५. कालः |
| १९. जमदग्निः | | ६. नियति |
| | | ७. पुरुषः |

## III दिव्यौगम्—शिवतत्वम्

अंसि (अभेद स्थिति)

२५. सनत्कुमारः
२६. सनन्दनः
२७. सनातनः
२८. सनकः
२९. ब्रह्मा
३०. नारायणः
३१. दक्षिणामूर्त्तिः

८ - तत्वम्
१. शुद्धविद्या
२. ईश्वरः
३. सदाशिवः
४. शक्तिः
५. शिवम्

## IV बिन्दुः

३२. दक्षिणकालिका - गुरुस्वरूपः (हंसः)

## V त्रिकोणे - अग्रकोणे

३३. कालभैरवः

## VI अक्षर व्याख्याः

क्रीं - जाग्रत्, हूं - स्वप्नः, ह्रीं - सुषुप्ति (निद्रा), ह्सौः तुरीयम् (आज्ञा)
ह्स्ख्फ्रेम् = तुरियातीतः (सहस्रारः)
हसक्षमलवर = बिन्दु - व्यापिका
यूम् = ७&।९ - समना&।उन्मना

## VII आकाशाः—

भुताकाशः— विशुद्धिः
चित्ताकाशः:— आज्ञा
चिताकाशः— सहस्रारः
दहराकाशः— हृदयस्थानाम्



## அகுல ஸஹஸ்ராரம்

(எதிர்ப்பக்கம் சக்ரம் பார்க்கவும்)

### I. மானவௌகம்—ஆத்ம தத்வம் த்வம்

1. கு3ரு
2. பரம கு3ரு
3. பரமேஷ்டி2 கு3ரு
4. கி3ராநந்த3 நாத2ர்
5. மத்4யாநந்த3 நாத2ர்
6. மலயாசலாநந்த3 நாத2ர்
7. விரேந்த்3ராநந்த3 நாத2ர்
8. கல்ஹாடாநந்த3 நாத2ர்
9. போ4கா3நந்த3நாத2ர்
10. கோங்கணாநந்த3நாத2ர்
11. மத்ஸ்யாநந்த3நாத2ர்
12. கோரக்ஷாநந்த3 நாத2ர்

(க்ரீம் ஹூம் ஹ்ரீம் ஹ்ஸௌ: ஹ்ஸ்க்2ப்2ரேம்)

24 தத்வங்கள்

1–5 = பஞ்ச பூதங்கள்

6–10 = பஞ்ச ஞானேந்த்ரியங்கள்

10–15 = பஞ்ச கர்மேந்திரியங்கள்

16-20 = பஞ்சப்ராணன்கள்

21-24 = மனஸ், புத்தி, அஹங்காரம் சித்தம் (ப்ரக்ருதி)

### II. ஸித்தௌகம்—வித்யாதத்வம்—தத்(ஓம்)

13. த3த்தாத்ரேயர்
14. நிதா3க4ர்
15. ரு3பு4:
16. அக3ஸ்த்யர்
17. ஶுகர்
18. வஸிஷ்ட2ர்
19. ஜமத3க்3னி
20. கௌ3தமர்
21. விஶ்வாமித்ரர்
22. ப4ரத்3வாஜர்
23. அத்ரி
24. கஶ்யபர்

7 தத்வங்கள்

1. மாயை
2. கலை
3. அவித்யை
4. அராகம்
5. காலம்
6. நியதி
7. புருஷன்

## III. திவ்யௌகம் (ஶிவதத்வம்) - அஸி - (அபேத நிலை)

25. ஸநத்குமாரர்
26. ஸநந்தனர்
27. ஸநாதனர்
28. ஸநகர்
29. ப்ரஹ்மா
30. நாராயணர்
31. தக்ஷிணாமூர்த்தி

5 தத்துவங்கள்
1 ஶுத்த வித்யை
2 ஈஶ்வரன்
3 ஸதாசிவன்
4 ஶக்தி
5 ஶிவம்

## IV. பிந்து—

32. தக்ஷிணகாலிகா (குருஸ்வரூபம்)—ஹம்ஸ:

## V. முக்கோணத்தில்—அக்ரகோணத்தில்

33. காலபைரவர்—

## VI. அக்ஷர விளக்கம்

க்ரீம்—ஜாக்ரத்
ஹூம்—ஸ்வப்னம் (கனவு)
ஹ்ரீம்—ஸுஷுப்தி (தூக்கம்)
ஹ்ஸௌ:—துரீயம் (ஆஜ்ஞா)
ஹ்ஸ்க்ப்ரேம்—துரீயாதீதம் (ஸ்ஹஸ்ராரம்)

ஹஸக்ஷமலவர—பிந்து முதல் வ்யாபிகா முடிய
யூம்—8&9-ஸமனு & உன்மனு

## VII. ஆகாஶங்கள்

பூத ஆகாஶம்—விஶுத்தி
சித்த ஆகாஶம்—ஆஜ்ஞை
சித் ஆகாஶம்—ஸஹஸ்ராரம்
தஹர ஆகாசம்—இதயஸ்தானம்





ஆசிரியர் : ஸ்ரீ மேதாநந்த நாதர்

(ஸ்ரீ V. S. சங்கரன்)

# தக்ஷிணகாலிகா உபாஸனை

## குரு பரம்பரை விவரங்கள்

### I. முதல் குரு

ஸ்ரீமஹாகாலர்

### II. நடுவில் சில குருமார்களுக்குப் பிறகு

ஸ்ரீகாலபைரவானந்த நாதர், ஸ்ரீஸ்யாமலானந்த நாதர்

### III. தொடர்ச்சியாக

1. ஸ்ரீகாலீசரணானந்த நாதர்,
2. ஸ்ரீராமானந்த நாதர்,
3. ஸ்ரீவிமலானந்த நாதர்,
4. ஸ்ரீகாலிகானந்த நாதர் (ஸ்ரீ P. K. ராஜகோபால ஐயர்)

### IV. ஸ்ரீவிமலா நந்தநாதர் ஸித்திநாள் (85 வயது)

பிங்கல கார்த்திகை பஹுல (கிருஷ்ண) அஷ்டமி ஞாயிறு பூரம் 4-12-77 அன்று தான் காலபைரவாஷ்டமியும் கூட.

### V. ஸ்ரீகாலிகானந்த நாதர்

1. பிறந்த நாள்—23-8-1913-ஆவணி மாதம் பரணி நக்ஷத்திரம்
2. தீக்ஷாதினம்—4-9-39-ஆவணி மாதம் பரணி நக்ஷத்திரம்
3. ஸித்தி நாள்—6-5-90–சுக்கில வருஷம் வைசாக சுத்த த்வாதசி(சித்திரை 23ஆம் நாள்) ஞாயிறு ஹஸ்தம்

குறிப்பு 1. அன்று விடியற்காலம் 3-30 மணியிலிருந்து தொடங்கி வைத்யநாதன் என்னும் யோகினியின் வீட்டில் காளீ கணபதி ஹோமம், காளீ ஹோமம், தம்பதி பூஜை, குமாரீ காலிகா பூஜை, ஸஹஸ்ரநாம அர்ச்சனை, பத்ராத்மஜர் பூஜை, பாராயணங்கள், மாலை 5-20மணிக்கு முடிந்து, சிறிது பிரஸாதம் உட்கொண்டு மாலை 5-30 மணிக்கெல்லாம் அவர் ஸித்தி அடைந்தார். காலிக்கு உகந்த ஆவணி பரணியன்று பிறந்தது 1913. அதே போல் ஆவணி பரணியன்றே (1939) தீக்ஷை பெற்று உயர்ந்த தெய்வீகச் சூழ்நிலையின் அவர் இறுதிக்காலம் ஏற்பட்டது என்பது அவருடைய உயர்வையும் அவர் தெய்வத்தன்மையையும் காட்டுகிறது.

2. யோகினிகள் அனைவரும் ஒவ்வொரு ஆண்டும், சாந்திராயண வைசாக சுத்த த்வாதசி (வைகாசி சுக்ல த்வாதசி) அன்று குரு ஆராதனையாக ஸ்ரீகாலிகாநந்தநாதருக்குக் குருபூஜை செய்து குரு அருளுக்குப் பாத்திரமாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

## நன்றி கூறல்

இந்நூல் வெளிவருவதற்குத் தேவையான பொருள் உதவி தந்து ஸஹாயம் செய்த அன்பர்கள்.

சென்னை தொழிலதிபர் மல்லாதி திரு. கிருஷ்ணமூர்த்தி, திரு. ஜானகிராமன் அறக்கட்டளை, கோவை, திரு. L. C. வெங்கடரங்கன், கொரட்டூர், சென்னை-80, திருமதி. நாகலக்ஷ்மி அம்மாள், அம்பத்தூர், திரு. S. முகுந்தன், ஆராய்ச்சி மாணவர், USA, திரு. T. K. வெங்கடேச்வரன், விஜயலக்ஷ்மீபுரம், அம்பத்தூர், திருமதி. அன்னபூரணி அம்மாள், அம்பத்தூர், திரு. வைத்யநாதன், I. C. F., சென்னை, திரு. K. வேணு-கோபால், T. P. I., அம்பத்தூர், திருமதி. தங்கம் சுப்ரமண்யம், சென்னை-17, திரு. S. சிவராமகிருஷ்ணன், அம்பத்தூர், திரு. V. S. ராமச்சந்திரன், அம்பத்தூர், திருமதி. திருவேணி, அசோக் நகர், சென்னை.

மேற்கூறிய எல்லா அன்பர்களுக்கும், இந்நூல் சிரிய முறையில் வெளிவர பல வகையிலும் உதவி புரிந்த எனது குருநாதர் குமாரன் திரு. குஞ்சரமணி அவர்களுக்கும், இன்னும் பல வகைகளில் உதவி புரிந்த பலருக்கும் நான் நன்றி கூறக்கடமைப் பட்டுள்ளேன்.

இவ்வெல்லா அன்பர்களுக்கும், தேவி ஸ்ரீ தக்ஷிணகாலிகா உபாஸக மண்டலமாகிய விமலாநந்த மண்டலியைச் சேர்ந்த அனைத்து யோகினி களுக்கும் தீர்க்காயுளையும் ஸகல இஹபர சௌக்கியங்களையும் அநுக்-கிரஹிக்க வேண்டுமாய்ப் பரதேவதையாகிய ஸ்ரீ தக்ஷிணகாலிகையைப் பிரார்த்திக்கிறேன்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் அச்சிட்டுத்தந்த இளங்கோ அச்சுக்கூடத்தாருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

இளங்கோ அச்சுக்கூடம் என்று சுத்த தமிழ் பெயரை வைத்துக் கொண்டு முழுக்க முழுக்க சம்ஸ்கிருத வேலைகளைச் செய்து கொண்டிருப்பது

பாராட்டுக்குயரிது. அதுவும் இது போன்ற ஸ்வர வேலைகளை செய்து கொண்டிருப்பது மிக மிக பாராட்டுக்குரியது. அங்கு பணியாற்றுகின்ற ஆண்களும், பெண்களும் அங்கேயே பயிற்சி அளிக்கப்பட்டு, மிகத் திறமை யாக பணிபுரிகிறார்கள். ஆன்மீக உலகுக்கு திரு மணியவன் ஆற்றும் தொண்டு மிகப் பெரிய தொண்டாகும். இந்த அச்சகம் ஸ்ரீ தேவியின் அருளால் மேன்மேலும் வளர்ச்சியடைந்து நாட்டுக்கு நல்ல சேவை செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

ஏற்கனவே முதல் பாகத்தின் நன்றி கூறலில், இந்நூலின் 2-வது, 3-வது பாகங்கள் வெளிவர இருக்கின்றன என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் இப்போது, இந்த இரண்டு பாகங்களும் (அதாவது 2-வது 3-வது பாகங்களும்) சேர்த்து எல்லா விஷயங்களையும் உள்ளடக்கியதாக இந்த இரண்டாவது பாகம் வெளிவருகின்றது. இத்துடன் தக்ஷிணகாலிகா உபாஸனமுறை முழுமையும் இந்த இரண்டு பாகங்களில் சொல்லி முடிக்கப் பட்டிருக்கிறது என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஓம் தத் ஸத்

ஆங்கீரஸ ஆஷாட சுக்ல சதுர்த்தி — **மேதாநந்த சங்கரன்**
2-8-1992

**ஸ்ரீ தக்ஷிண காலிகா உபாஸனை (பூஜை)**

**முக்கிய தினங்கள்**

1. மாதம்—ஆவணி
2. திதி—அஷ்டமி, சதுர்த்தசி, அமாவாஸ்யா
3. வாரம்—செவ்வாய், சனி
4. நக்ஷத்திரம்—பரணி

ஆவணி பரணி மிகவும் முக்கியமான தினமாகும்.

# ॥ अनुक्रमणिका ॥

## द्वितीय भागः

—o—

# பொருளடக்கம்

## பாகம்—2

### अथ श्रीसर्वमङ्गलविद्या नाम

## ।। श्रीदक्षिणकालिकात्रिशतीस्तोत्रम् ।।

अथ समष्टिन्यासा:—

ॐ (ह्रीं) अस्य श्रीसर्वमङ्गलविद्याया नाम श्रीदक्षिणकालिकात्रिशतीस्तोत्र-महामन्त्रस्य श्रीकालभैरव ऋषि: । अनुष्टुप् छन्द: । श्रीदक्षिणकालिका देवता । ह्रीं बीजम् । ह्रूं शक्ति: । क्रीं कीलकम् । श्रीदक्षिणकालिकाप्रसादसिद्ध्यर्थे जपे विनियोग: ।।

### அத2 ஸ்ரீஸர்வமங்க3லவித்3யா நாம

## ஸ்ரீத3க்ஷிணகாலிகாத்ரிசதீஸ்தோத்ரம் ।।

அத2 ஸமஷ்டிந்யாஸா:—

ௐ (ஹ்ரீம்) அஸ்ய ஸ்ரீஸர்வமங்க3லவித்3யாயா நாம ஸ்ரீத3க்ஷிணகாலிகாத்ரிஶதீ-ஸ்தோத்ரமஹாமந்த்ரஸ்ய ஸ்ரீகாலபை4ரவ ருஷி: । அநுஷ்டுப் ச2ந்த3: । ஸ்ரீத3க்ஷிண-காலிகா தே3வதா । ஹ்ரீம் பீ3ஜம் । ஹூம் ஶக்தி: । க்ரீம் கீலகம் । ஸ்ரீத3க்ஷிணகாலிகா-ப்ரஸாத3ஸித்3த்3யர்த்2தே ஜபே விநியோக3: ।।

''ஸர்வமங்கலவித்யா'' என்ற சிறப்புப் பெயர் கொண்டது ஸ்ரீதக்ஷிணகாலிகா-த்ரிஶதீ ஸ்தோத்திரம். இந்த க்ரந்தத்தில் ''க்ரீம் (क्रीं) காரம்'' முதலிய இருபத்-திரண்டு பீஜங்கள்கொண்ட வித்யாராஜ்ஞீ என்ற காலீ வித்யையின் ஒவ்வொரு பீஜத்-துக்கும் பதினான்கு நாமங்கள் வீதம் முந்நூற்றெட்டு நாமங்கள் கோக்கப்பட்டிருக்-கின்றன. ஆக இது ஒரு மந்த்ரமே விக்ரஹமான க்ரந்தமாகும்.

இதன் ருஷி ஸ்ரீ காலபைரவர். ருஷி சந்தஸ், தேவதை, முதலிய ந்யாஸங்க-ளின் செய்முறை **144-145** பக்கங்களில் பார்க்க: ஆனால் ஒரு வித்தியாஸம்: மூல-மந்த்ரத்தில் ஶக்தியை ஸ்தனங்களில் ந்யாஸம் செய்யவேண்டியிருக்க, ஸஹஸ்ர-நாமம், த்ரிஶதீ, அஷ்டோத்தரஶதம், கவசம், ஹ்ருதயம் ஆகியவற்றில் ஶக்தியைப் பாதங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

अथ ऋष्यादिन्यासाः—

ॐ (ह्रीं) श्रीकालभैरवर्षये नमश्शिरसि । अनुष्टुप्छन्दसे नमो मुखे । श्रीदक्षिणकालिकायै देवतायै नमो हृदये । ह्रीं बीजाय नमो गुह्ये । हूं शक्तये नमः पादयोः । क्रीं कीलकाय नमो नाभौ । विनियोगाय नमस्सर्वाङ्गे ॥

मूलेन करौ संशोध्य ॥

அத$_2$ ருஷ்யாதி$_3$ந்யாஸா:—

ௐ (ஹ்ரீம்) ஸ்ரீகாலபை$_4$ரவர்ஷயே நமஶ்ஶிரஸி । அநுஷ்டுப்ச$_2$ந்த$_3$ஸே நமோ முகே$_2$ । ஸ்ரீத$_3$க்ஷிணகாலிகாயை தே$_3$வதாயை நமோ ஹ்ருத$_3$யே । ஹ்ரீம் பீ$_3$ஜாய நமோ கு$_3$ஹ்யே । ஹூம் ஶக்தயே நம: பாத$_3$யோ: । க்ரீம் கீலகாய நமோ நாபௌ$_4$ । விநியோகா$_3$ய நமஸ்ஸர்வாங்கே$_3$ ।।

மூலேந கரௌ ஸம்ஶோத்$_4$ய ।।

இதன் செய்முறையை 145ம் பக்கத்தில் பார்க்க.

अथ करन्यासाः—

क्रां अङ्गुष्ठाभ्यां नमः । क्रीं तर्जनीभ्यां नमः । क्रूं मध्यमाभ्यां नमः । क्रैं अनामिकाभ्यां नमः । क्रौं कनिष्ठिकाभ्यां नमः । क्रः करतलकरपृष्ठाभ्यां नमः ॥

அத$_2$ கரந்யாஸா:—

க்ராம் அங்கு$_3$ஷ்டா$_2$ப்$_4$யாம் நம: । க்ரீம் தர்ஜநீப்$_4$யாம் நம: । க்ரூம் மத்$_4$யமாப்$_4$யாம் நம: । க்ரைம் அநாமிகாப்$_4$யாம் நம: । க்ரௌம் கநிஷ்டி$_2$காப்$_4$யாம் நம: । க்ர: கரதலகரப்ருஷ்டா$_2$ப்$_4$யாம் நம: ।।

இதன் செய்முறையை 146ம் பக்கத்தில் பார்க்க.

अथ अङ्गन्यासाः—

क्रां हृदयाय नमः । क्रीं शिरसे स्वाहा । क्रूं शिखायै वषट् । क्रैं कवचाय हुं । क्रौं नेत्रत्रयाय वौषट् । क्रः अस्त्राय फट् ॥

அத அங்கந்யாஸா:—
2 3

க்ராம் ஹ்ருதயாய நம: । க்ரீம் ஶிரஸே ஸ்வாஹா । க்ரூம் ஶிகாயை வஷட் ।
3 2
க்ரைம் கவசாய ஹும் । க்ரௌம் நேத்ரத்ரயாய வௌஷட் । க்ர: அஸ்த்ராய பட் ॥
2

**இதன் செய்முறையை 146ம் பக்கத்தில் பார்க்க.**

अथ दिग्बन्धः—

क्रीं भूर्भुवस्सुवरोम् इति दिग्बन्धः ॥

அத திக்பந்த:—
2 3 3 3 4

க்ரீம் பூர்ப்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த: ॥
4 4 3 3 3 4

மூலமந்த்ரத்தில் ஹ்ரீம்காரத்தால் திக்பந்தனம். ஸஹஸ்ரநாமம், த்ரிஶதி, அஷ்டோத்தரஶதம், கவசம், ஹ்ருதயம் ஆகியவற்றில் க்ரீம் காரத்தால் திக்பந்தனம்.

अथ ध्यानम्—

शवारूढां महाभीमां घोरदंष्ट्रां हसन्मुखीम् ।
चतुर्भुजां खड्गमुण्डवराभयकरां शिवाम् ॥ १ ॥
मुण्डमालाधरां देवीं ललज्जिह्वां दिगम्बराम् ।
एवं सञ्चिन्तयेत्कालीं श्मशानालयवासिनीम् ॥ २ ॥
ध्यायेत्कालीं महामायां त्रिनेत्रां बहुरूपिणीम् ।
चतुर्भुजां ललज्जिह्वां पूर्णचन्द्रनिभाननाम् ॥ ३ ॥
नीलोत्पलदलप्रख्यां शत्रुसङ्घविदारिणीम् ।
नरमुण्डं तथा खड्गम् अभयं वरदं तथा ॥ ४ ॥
बिभ्राणां रक्तवदनां दंष्ट्रालीं घोररूपिणीम् ।
अट्टाट्टहासनिरतां सर्वदा च दिगम्बराम् ॥ ५ ॥
शवासनस्थितां देवीं मुण्डमालाविभूषिताम् ।
महाकालेन सार्द्धोर्द्ध्वम् उपविष्टरतातुराम् ॥ ६ ॥

नागयज्ञोपवीतां च चन्द्रार्द्धकृतशेखराम् ।
आद्यां सदा नवां घोरां कृष्णरूपां परात्मिकाम् ।। ७ ।।
मुण्डमालां विशालाक्षीं कंकालबीजरूपिणीम् ।
प्रेतवाहां सिद्धिलक्ष्मीम् अनिरुद्धां सरस्वतीम् ।। ८ ।।
काकरूपां कलातीतां कामिनीं कृष्णसोदरीम् ।
ह्लींह्लींस्वरूपिणीं श्रेष्ठां कपालिप्राणनायिकाम् ।। ९ ।।
कुण्डगोलप्रियां देवीं स्वयम्भूकुसुमे रताम् ।
रतिप्रियां महारौद्रीं कठिनां खड्गधारिणीम् ।। १० ।।
दूतीप्रियां महादूतीं दूतीयोगेश्वरीं पराम् ।
दूतीयोगोद्भवरतां दूतीरूपां करालिकाम् ।। ११ ।।
श्यामाङ्गीं दिग्वसानां शवशिवहृदयस्थां सदा लोलजिह्वां
दोर्दण्डैः क्लृप्तकाञ्चीं विकसितवदनां भीमदंष्ट्रां त्रिनेत्राम् ।
मुण्डस्रग्भूषणां हस्तविधृतवरदाभीतिनिस्त्रिंशमुण्डां
ध्यायेत्प्रेम्णा महाकालरतिपरसुखीं दक्षिणां कालिकां ताम् ।।१२।।

அத த்யானம்—
2 4

ஶவாரூடாம் மஹாபீமாம் கோரதம்ஷ்ட்ராம் ஹஸன்முகீம் ।
4 4 4 3 2
சதுர்ப்புஜாம் கட்கமுண்டவராபயகராம் ஶிவாம் ।। 1 ।।
4 2 3 3 3 4
முண்டமாலாதராம் தேவீம் லலஜ்ஜிஹ்வாம் திகம்பராம் ।
3 4 3 3 3 3
ஏவம் ஸஞ்சிந்தயேத்காலீம் ஶ்மஶாநாலயவாஸினீம் ।। 2 ।।
த்யாயேத்காலீம் மஹாமாயாம் த்ரிநேத்ராம் பஹுரூபிணீம் ।
4 3
சதுர்ப்புஜாம் லலஜ்ஜிஹ்வாம் பூர்ணசந்த்ரநிபானனாம் ।। 3 ।।
3 4 3 4
நீலோத்பலதலப்ரக்யாம் ஶத்ருஸங்கவிதாரிணீம் ।
3 2 4 3
நரமுண்டம் ததா கட்கம் அபயம் வரதம் ததா ।। 4 ।।
3 2 2 3 3 4 3 2
பிப்ராணாம் ரக்தவதனாம் தம்ஷ்ட்ராலீம் கோரரூபிணீம் ।
3 4 3 3 4
அட்டாட்டஹாஸநிரதாம் ஸர்வதா ச திகம்பராம் ।। 5 ।।
3 3 3

ஶவாஸனஸ்திதாம் தேவீம் முண்டமாலாவிபூஷிதாம் ।
மஹாகாலேன ஸார்த்தோர்த்த்வம் உபவிஷ்டரதாதுராம் ॥ 6 ॥
நாகயஜ்ஞோபவீதாம் ச சந்த்ரார்த்தக்ருதஶேகராம் ।
ஆத்யாம் ஸதா நவாம் கோராம் க்ருஷ்ணரூபாம் பராத்மிகாம் ॥ 7 ॥
முண்டமாலாம் விஶாலாக்ஷீம் கங்காலபீஜரூபிணீம் ।
ப்ரேதவாஹாம் ஸித்திலக்ஷ்மீம் அநிருத்தாம் ஸரஸ்வதீம் ॥ 8 ॥
காகரூபாம் கலாதீதாம் காமினீம் க்ருஷ்ணஸோதரீம் ।
ஹ்ரீம்ஹ்ரீம்ஸ்வரூபிணீம் ஶ்ரேஷ்டாம் கபாலிப்ராணநாயிகாம் ॥ 9 ॥
குண்டகோலப்ரியாம் தேவீம் ஸ்வயம்பூகுஸுமே ரதாம் ।
ரதிப்ரியாம் மஹாரௌத்ரீம் கடினாம் கட்கதாரிணீம் ॥ 10 ॥
தூதீப்ரியாம் மஹாதூதீம் தூதீயோகேஶ்வரீம் பராம் ।
தூதீயோகோத்பவரதாம் தூதீரூபாம் கராலிகாம் ॥ 11 ॥

ஶ்யாமாங்கீம் திக்வஸனாம் ஶவஶிவஹ்ருதயஸ்தாம் ஸதா லோலஜிஹ்வாம்
தோர்த்தண்டை꞉ க்லுப்தகாஞ்சீம் விகஸிதவதனாம் பீமதம்ஷ்ட்ராம் த்ரிநேத்ராம் ।
முண்டஸ்ரக்பூஷணாம் ஹஸ்தவித்ருதவரதாபீதிகிஸ்த்ரிம்ஶமுண்டாம்
த்யாயேத்ப்ரேம்ணா மஹாகாலரதிபரஸுகீம் தக்ஷிணாம் காலிகாம் தாம் ॥ 12 ॥

மூலமந்த்ரத்தின் த்யானத்தின் ஆரம்பத்தில் அமைந்த "ஶவாரூடாம்..." என்று தொடங்கும் முதல் இரண்டு ஶ்லோகங்கள் ஸஹஸ்ரநாமம், த்ரிஶதீ அஷ்டோத்தரஶதம் ஆகியவற்றின் ஆரம்பத்திலும் அமைந்திருக்கின்றன. மூலமந்த்ரத்யானத்தில் குறிப்பிட்ட கருத்துக்களே பெரும்பாலும் இங்கும் கூறப்படுகின்றன. உபரியாகப் பின்வரும் கருத்துக்களும் கூறப்படுகின்றன:—

நாம் நினைத்துக்கூடப் பார்க்க முடியாதபடி பல ரூபங்கள் எடுக்கவல்லவள்; பூர்ணசந்த்ரனைப்போல் அழகாகவும், ப்ரகாஶமாகவும் குளிர்ந்த நோக்கு உள்ளதுமான முகமண்டலம் கொண்டவள்; கருங்குவளைப் புஷ்பம்போல் அழகிய கரிய சாயல் கொண்டவள்; ஸர்ப்பத்தை யஜ்ஞோபவீதமாக அணிந்திருப்பவள்; சந்த்ர கலையைத் தலையில் அணிகலனாக அணிந்திருப்பவள்; இவ்வெல்லா அண்டங்களும் தோன்று-

வதற்கு மூலகாரணமாக, அநாதிகாலமாய்த் தன் ஶக்தியை ப்ரஸரிக்கச் செய்து-கொண்டிருப்பவள்; ஆயினும் எப்பொழுதும் புதிய பொலிவுடன் இலங்கிக்-கொண்டிருப்பவள்; எல்லா ஜீவராசிகளையும் தன்பால் ஈர்த்துக் கொண்டிருப்பவள்; வ்யக்தாவ்யக்தமான எல்லா ப்ரக்ருதிகளுக்கும் மேலான பரமாத்ம ஸ்வரூபிணியா-யிருப்பவள்; "க" (क) காரமாகிய கால ஶக்தி மாத்ருகா பீஜஸ்வரூபிணியாயிருப்பள்; எல்லா ஸித்திகளையும் பக்தர்களுக்கு மழையெனப் பொழிபவள்; எங்கும் எதிலும் என்றென்றும் தடையற்ற கதி உள்ளவள்; யாவராலும் முற்றிலும் உணரமுடியாத அருவுருவானவள்; அவாங்மானஸகோசரமானவள்; அறுபத்து நான்கு கலைகளின் செயல்பாடுகளுக்கு அப்பாற்பட்டவள்; மந்த்ர மாத்ருகாஸ்வரூபிணியானவள்; க்ருஷ்ண பரமாத்மாவின் (அதாவது மஹாவிஷ்ணுவின்) ஸஹோதரியாய்த் தோன்றி அருளியவள்; மாயாபீஜமாகிய "ஹ்ரீம்" (ह्रीं) காரத்தின் இரட்டை வடிவினள் (அதாவது "ஆத்மஜ்ஞானம் - மோக்ஷம்" ஆகிய இவ்விரண்டின் இணைப்பைச் சுட்டிக் காட்டுபவள்); எல்லா தேவதைகளிலும் உத்தமமானவள்; ஶ்ரீ மஹாகாலரால் தன் உயிருக்குயிராய் ஆராதிக்கப்படுபவள்; ஶிவலிங்க ஆராதனையில் பெரிதும் விருப்பம் கொண்டவள்; ஐம்பத்தொரு மாத்ருகைகளிலும் இன்புறுபவள்; அதிலும் "க" (क) காரத்திலும், "க்ரீம்" (क्रीं) காரத்திலும் விசேஷ இன்பம் கொண்டு அவற்றிலேயே எக்காலத்திலும் ஊடாடி மகிழ்பவள்; யோகநிஷ்டையில் மூலாக்னியைக் கிளப்பி மேலே ஸஹஸ்ராரத்தை நோக்கி இயக்கி ஜ்வலிக்கச் செய்யும் யோகிகளிடம் அபார ஸந்தோஷம் கொள்பவள்; தன் நிலையிலிருந்து ஒரு பொழுதும் வழுவாதவள்; தன் தோழிகளுடன் லீலைகளில் திளைத்து நந்திகேஶ்வரரைச் சிவனிடம் தூது அனுப்பு-பவள்; சிலசமயம் பரமசிவனையே தூது அனுப்பி அச்சமயம் தானே சிவமயமாகி-விடுபவள்; நாயகனுக்குத் தான் அனுப்பிய தூது சரியாக நடந்ததை அறிந்து ஸந்தோஷிப்பவள்; ஆனந்த வேகத்தில் தன்னை மறந்து அந்த ஆனந்த உணர்ச்சி ஆவேசத்தில் திளைத்திருப்பவள்; எப்போதும் மாறாமல் தொடர்ந்து கொண்டே-யிருக்கும் நவயௌவனப் பருவத்தில் தன் நாயகனுக்கு இஷ்ட பத்னியாக இருந்து-கொண்டு நாயகனின் சேர்க்கையிலேயே ஆழ்ந்திருப்பவள்.

अथ पञ्चोपचारपूजा—

लं पृथिव्यात्मने गन्धं कल्पयामि नमः ।

हं आकाशात्मने पुष्पाणि कल्पयामि नमः ।

यं वाय्वात्मने धूपं कल्पयामि नमः ।

रं अग्न्यात्मने दीपं कल्पयामि नमः ।

वं अमृतात्मने अमृतं महानैवेद्यं कल्पयामि नमः ।

सं सर्वात्मने सर्वोपचारान् कल्पयामि नमः ॥

அத பஞ்சோபசாரபூஜா—

லம் ப்ருதிவ்யாத்மனே கந்தம் கல்பயாமி நம: ।

ஹம் ஆகாஶாத்மனே புஷ்பாணி கல்பயாமி நம: ।

யம் வாய்வாத்மனே தூபம் கல்பயாமி நம: ।

ரம் அக்ன்யாத்மனே தீபம் கல்பயாமி நம: ।

வம் அம்ருதாத்மனே அம்ருதம் மஹாநைவேத்யம் கல்பயாமி நம: ।

ஸம் ஸர்வாத்மனே ஸர்வோபசாரான் கல்பயாமி நம: ॥

**இதன் செய்முறையை 150 ஆம் பக்கத்தில் பார்க்க.**

यत्किञ्चिन्मद्यमांसादिप्रतिनिधित्वेन मकरन्दमिश्रितमाहिषदधिमूलकसितार्द्रकद्राक्षामाषगोक्षीरलशुनखर्जूररसपानपूर्णचषकं देव्या दक्षिणपार्श्वे आदध्यात् । (आहितम्) ॥

योनिमुद्रां[1] मत्स्यमुद्रां[2] च प्रदर्श्य श्रीविद्याराज्ञीमहामन्त्रं द्वाविंशत्यन्यूनसङ्ख्यं जप्त्वा त्रिशतीनामस्तोत्रपारायणं कुर्य्यात् । पारायणारम्भपूर्वं पारायणपूर्त्यनन्तरञ्च यथाशक्ति उपचारवरिवस्यापूर्वकं स्वात्मार्पणाहुतिमन्त्रं षड्वारं जपेत् ॥

யத்கிஞ்சின்மத்யமாம்ஸாதிப்ரதிநிதித்வேன மகரந்தமிஶ்ரிதமாஹிஷததிமூலகஸிதார்த்ரகத்ராக்ஷாமாஷகோக்ஷீரலஶுனகர்ஜூரரஸபானபூர்ணசஷகம் தேவ்யா தக்ஷிணபார்ஶ்வே ஆதத்யாத் ॥ (ஆஹிதம்) ॥

யோனிமுத்ராம் மத்ஸ்யமுத்ராம் ச ப்ரதர்ஶ்ய ஸ்ரீவித்யாராஜ்ஞீமஹாமந்த்ரம் த்வாவிம்ஶத்யந்யூனஸங்க்யம் ஜப்த்வா த்ரிஶதீநாமஸ்தோத்ரபாராயணம் குர்ய்யாத் । பாராயணாரம்பபூர்வம் பாராயணபூர்த்த்யனந்தரஞ்ச யதாஶக்தி உபசாரவரிவஸ்யாபூர்வகம் ஸ்வாத்மார்ப்பணாஹுதிமந்த்ரம் ஷட்வாரம் ஜபேத் ॥

ஸஹஸ்ரநாம க்ரமத்தில் கூறியபடி சஷகம் தயாரித்து தேவிக்கு வலது பக்கத்தில் வைக்கவேண்டும். யோனி முத்திரையும் மத்ஸ்ய முத்திரையும் காட்டி வித்யா-

---

**[1]யோனி முத்திரையின் செய்முறையை பக்கம் 28 இல் அடிக்குறிப்பில் காண்க.**

**[2]மத்ஸ்ய முத்திரையின் செய்முறையை பக்கம் 183இல் காண்க.**

ராஜ்ஞியை இருபத்திரண்டு ஆவ்ருத்திக்குக் குறையாமல் ஜபித்து த்ரிஶதீஸ்தோத்ர-பாராயணம் செய்யவேண்டும். பாராயணத்துக்கு முன்னும் பின்னும், யதாஶக்தி ஸகல உபசாரங்களுடன், ஸ்வாத்மார்ப்பணாஹுதி மந்த்ரத்தை ஆறு ஆவ்ருத்தி ஜபிக்கவேண்டும்.

अथ आत्मशुद्धिः—

ॐ (ह्रीं) क्रीं हूं ह्रीं नमश्श्रीदक्षिणकालिकायै ॥

अहं सुवे पितरमस्य मूर्द्धन्मम योनिरप्स्वऽन्तस्समुद्रे । ततो वितिष्ठे भुवनानि विश्वोतामूं द्यां वर्ष्मणोपस्पृशामि ॥

அத ஆத்மஶுத்தி:—

ॐ (ஹ்ரீம்) க்ரீம் ஹூம் ஹ்ரீம் நமஶ்ஶ்ரீதக்ஷிணகாலிகாயை ॥

இந்த மந்த்ரத்தால் ஸாதகன் தன் மனஸ்ஸைச் சுத்தப் படுத்திக்கொள்ள-வேண்டும். மனஸ்ஸை இங்ஙனம் சுத்திகரித்துக்கொள்ளல் வீர்யம் பெறுவதற்காக ''அஹம் ஸுவே'' என்ற ருக்கை ஒரு தடவை மனத்தூய்மையுடன் உச்சரிக்க-வேண்டும்.

அஹம் ஸுவே பிதரமஸ்ய மூர்த்தன்மம யோனிரப்ஸ்வந்தஸ்ஸமுத்ரே । ததோ விதிஷ்டே புவனானி விஶ்வோதாமூம் த்யாம் வர்ஷ்மணோபஸ்ப்ருஶாமி ॥

अथ स्वात्मार्पणाहूतिः— मूलेन शङ्खापूरणम्—

ॐ नमो भगवति अखिलाण्डकोटिब्रह्माण्डनायिके - क्रीं कालिके - श्रीमहाकालरमणक्लिन्नानन्दे-क्रैं क्रौं हुं फट्-आहआह—असइ असइ-एहि एहि - मम सर्वरोगांश्छिन्धि छिन्धि - मम ओज ऊर्ज्जय ऊर्ज्जय - मम सर्वारिष्टं शमय शमय - मम सवशत्रून् मारय मारय-मम आयुर्वर्द्धय वर्द्धय-मम सर्वकार्य्याणि साधय साधय-वरं देहि वरं देहि - क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं दक्षिणे कालिके क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं स्वाहा ॥

ஸ்வாத்மார்ப்பணாஹுதி மந்த்ரத்தை முதல் தடவை உச்சரித்துக் கொண்டே, அதன் மத்தியில் மூலத்தை ஜபித்துக் கொண்டே, தேவிக்கு இரு பார்ஶ்வங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டுள்ள இரு ஶங்கங்களையும் சுத்த ஜலத்தால், அதாவது கலஶ ஜலத்தால், நிரப்பவேண்டும்.

அத ஸ்வாத்மார்ப்பணாஹுதி:— மூலேன ஶங்காபூரணம்—

ஓம் நமோ பகவதி அகிலாண்டகோடிப்ரஹ்மாண்டநாயிகே - க்ரீம் காலிகே-ஸ்ரீமஹாகாலரமணக்லின்னானந்தே — க்ரைம் க்ரௌம் ஹூம் பட் - ஆஹ ஆஹ - அஸஇ அஸஇ - ஏஹி ஏஹி - மம ஸர்வரோகாம்ஶ்சிந்தி ச்சிந்தி - மம ஓஜ ஊர்ஜ்ஜய ஊர்ஜ்ஜய - மம ஸர்வாரிஷ்டம் ஶமய ஶமய - மம ஸர்வஶத்ரூன் மாரய மாரய - மம ஆயுர்வர்த்தய வர்த்தய - மம ஸர்வகார்ய்யாணி ஸாதய ஸாதய - வரம் தேஹி வரம் தேஹி - க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் தக்ஷிணே காலிகே - க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா ॥

इमं स्वात्मार्पणाहुतिमन्त्रं षड्वारं जप्त्वा त्रिशतीस्तोत्रपारायणं कुर्य्यात् ॥

இமம் ஸ்வாத்மார்ப்பணாஹுதிமந்த்ரம் ஷட்வாரம் ஜப்த்வா த்ரிஶதீஸ்தோத்ர-பாராயணம் குர்ய்யாத் ॥

இந்த ஸ்வாத்மார்ப்பணாஹுதி மந்த்ரத்தை ஆறுதடவை ஜபித்து த்ரிஶதி ஸ்தோத்திர பாராயணம் செய்யவேண்டும்.

इति पूर्वभाग: ॥

இதி பூர்வபாக: ॥

இங்ஙனமாக பூர்வபாகம் முடிவடைகிறது.

---

காலீ ஸப்தாவரண பூஜாபத்தியில் ஸாதகனால் ஆராதிக்கப்பட வேண்டிய தேவதைகள் முதலியன பின்வருமாறு :— ஆவரணம், ஸ்ரூபம், ப்ரக்ருதி, தேவதை, பீஜம், சக்ரம், ஸ்வாமினீ, யோகினீ, ஶக்தி தேவதை, ஸித்தி, முத்ரா, வாஸனை :

आवरणं स्वरूपञ्च प्रकृति देवतां तथा ।
बीजं चक्रं स्वामिनीञ्च योगिनीशशक्तिदेवता: ॥
सिद्धि मुद्रां तथा चैवाराधयेद्वासनां क्रमात् ॥

ஆவரணம் ஸ்வருபஞ்ச ப்ரக்ருதிம் தேவதாம் ததா
பீஜம் சக்ரம் ஸ்வாமினீஞ்ச யோகினீஶ்ஶக்திதேவதா: ॥
ஸித்திம் முத்ராம் ததா சைவாராதயேத்வாஸனாம் க்ரமாத் ॥

—காலீதந்த்ரம்.

---

॥ ॐ ॥

# ॥ अथ श्रीदक्षिणकालिकात्रिशतीस्तोत्रप्रारम्भः ॥

॥ ॐ ॥ ह्रीं ॥ क्रींकारो क्रींपदाकारा क्रींकारमन्त्रपूरणा ।
क्रींमती क्रींपदावासा क्रींबीजजपतोषिणी ॥ १ ॥

क्रींकारसत्त्वा क्रीमात्मा क्रींभूषा क्रींमनुस्वराट् ।
क्रींकारगर्भा क्रींसंज्ञा क्रीकारध्येयरूपिणी ॥ २ ॥

क्रींकारात्तमनुप्रौढा क्रींकारचक्रपूजिता ।
क्रींकारलालनानन्दा क्रींकारालापतोषिणी ॥ ३ ॥

क्रींकलानादबिन्दुस्था क्रींकारचक्रवासिनी ।
क्रींकारलक्ष्मीः क्रींशक्तिः क्रींकारमनुमण्डिता ॥ ४ ॥

क्रींकारानन्दसर्वस्वा क्रींज्ञेयलक्ष्यमात्रगा ।
क्रींकारबिन्दुपीठस्था क्रींतारनादमोदिनी ॥ ५ ॥

क्रींतत्त्वज्ञानविज्ञेया क्रींकारयज्ञपालिनी ।
क्रींकारलक्षणानन्दा क्रींकारलयलालसा ॥ ६ ॥

# அத2 ஸ்ரீத3க்ஷிணகாலிகாத்ரிசதீஸ்தோத்ரப்ராரம்ப4:—

ௐ (ஹ்ரீம்) க்ரீம்காரீ க்ரீம்பதா3காரா க்ரீம்காரமந்த்ரபூரணா ।
க்ரீம்மதீ க்ரீம்பதா3வாஸா க்ரீம்பீ3ஜஜபதோஷிணீ ॥ 1 ॥
க்ரீம்காரஸத்த்வா க்ரீமாத்மா க்ரீம்பூ4ஷா க்ரீம்மநுஸ்வராட் ।
க்ரீம்காரக3ர்ப்4பா க்ரீம்ஸம்ஜ்ஞா க்ரீம்காரத்3யேயரூபிணீ ॥ 2 ॥
க்ரீம்காராத்தமநுப்ரௌடா4 க்ரீம்காரசக்ரபூஜிதா ।
க்ரீம்காரலாலநாநந்3தா க்ரீம்காராலாப4தோஷிணீ ॥ 3 ॥

க்ரீம்கலாநாதபிந்துஸ்தா க்ரீம்காரசக்ரவாஸினீ ।
க்ரீம்காரலக்ஷ்மீ க்ரீம்ஶக்தி: க்ரீம்காரமநுமண்டிதா ॥ 4 ॥

க்ரீம்காரானந்தஸர்வஸ்வா க்ரீம்ஜ்ஞேயலக்ஷ்யமாத்ரகா ।
க்ரீம்காரபிந்துபீடஸ்தா க்ரீம்தாரநாதமோதினீ ॥ 5 ॥

க்ரீம்தத்த்வஜ்ஞானவிஜ்ஞேயா க்ரீம்காரயஜ்ஞபாலினீ ।
க்ரீம்காரலக்ஷணானந்தா க்ரீம்காரலயலாலஸா ॥ 6 ॥

1. **क्रींकारी—க்ரீம்காரீ—**

"க்ரீம்" என்ற பீஜத்தை நமக்கு உருவாக்கிக் கொடுப்பவள்; "க்ரீம்" என்ற பீஜத்தால் மட்டும் ஆன சிறப்பான ஏகாக்ஷர மந்த்ரத்திற்கு உரியவள்.

2. **क्रींपदाकारा—க்ரீம் பதாகாரா—**

"க்ரீம்" என்ற பதமே தன் சிறப்பான உருவாகக் கொண்டவள்; "க்ரீம்" என்ற மந்த்ர ஜபத்தால் தன் பக்தர்களுக்கு மோக்ஷபதம் (பதவி) அளித்தருளும் அவ்யாஜ கருணாமூர்த்தி.

3. **क्रींकारमन्त्रपूरणा — க்ரீம்காரமந்த்ரபூரணா—**

க்ரீம் காரத்தை நாம் ஜபிக்கும் போது அந்த ஒரு பீஜமே பூர்ணமந்த்ரமாக உருவாகிறது. இதனால் இந்த பீஜம் ஏகாக்ஷரீ மந்த்ரமாகி, பிண்டமந்த்ரமாக நிறைவு பெற்று முழு ஶக்தியுடன் இயங்குகிறது. ஆக, ஆதிபராஶக்தியாகிய காலிகை ஶாக்த தத்துவங்களெல்லாம் முழுமையாக ஒருங்கே ப்ரவஹிக்கும் இந்த மந்த்ரத்தின் அபர ஸ்வரூபிணியே ஆவாள்.

4. **क्रींमती — க்ரீம்மதீ—**

"க்ரீம்" என்ற பீஜம் அவளது உடைமை; அவளது பூர்ணஸ்வரூபம். நடைமுறையில் நம் வாழ்க்கையில் நமக்கு உரியதெல்லாம் நம் வசமாக இருப்பதில்லை: ஆனால், ப்ரேம பூர்ண ஜப த்யானத்துடன் தன்னை உபாஸிக்கும் ப்ரேமிகளான யோகினிகளுக்கு இவ்வெல்லாவற்றையும் இந்த "ரஸஜ்ஞா" என்ற ஶாக்த மந்த்ரமானது தன் கேவல ஶக்தியினாலேயே வசமாக்கிக் கொடுக்கும்: அதற்குக் காரணம், ப்ரேம உபாஸனையின் விளைவாக யோகினியின் மனத்தில் காலிகையின் அவிச்சின்னமான ஸாந்நித்தியமே. நம் ப்ரேமையே உருவான காலிகையே நம் வசமாவாள்.[1]

---

1. "ரஸஜ்ஞா" என்ற பரிபாஷைப் பதம் க்ரீம் (क्रीं)காரத்தின் சிறப்புப்பெயர் :

रसम्—ऐहिकामुष्मिकरस्य—जानाति इति रसज्ञा। अस्मिन् जगति—अस्मिन् जन्मनि—यद्यद्रस्यं-ज्ञेयं-भवति तत्तज्ज्ञायते अनया इति रसज्ञा। रस्यसर्वस्वम्-एतज्जगज्जन्मन्यनुभाव्यं सर्वं-पूर्णतो ज्ञायते-अनुभूयते अनया इति च।

5. क्रींपदावासा—க்ரீம்பதாவாஸா—
3

மஹாகாலருடைய ஹ்ருதயத்தில் "க்ரீம்" என்ற பீஜத்துக்குள் அதன் ஒலி வடிவாக நிரந்தரமாக வஸிப்பவள்.

6. क्रींबीजजपतोषिणी—க்ரீம்பீஜஜபதோஷிணீ—
3

க்ரீம்கார ஜபத்தால் அதிகம் ஸந்தோஷிப்பவள்; அதனை ஜபிப்பவர்களை அதிகம் மகிழ்விப்பவள்.

7. क्रींकारसत्त्वा—க்ரீம்காரஸத்த்வா—

க்ரீம்காரத்தின் ஒலியிலேயே தன் பூர்ண ஶக்தி நிறைவாகப் பொருந்தியவள்.

8. क्रीमात्मा—க்ரீமாத்மா—

க்ரீம் காரத்தின் ஒலியை ரஸிப்பதிலேயே தன் மனம் லயித்தவள். ஆகலின் இந்த பீஜத்திற்கு "ரஸஜ்ஞா" என்பது சிறப்புப் பெயர்.

9. क्रींभूषा—க்ரீம்பூஷா—
4

இங்கு க்ரீம் என்ற பீஜம் முண்டமாலையைக் குறிக்கிறது. அதாவது, தர்மார்த்த காமமோக்ஷங்களைக் கொடுக்கவல்ல க்ரீம்காரமே தனக்கு ஆபரணமாகக் கொண்டவள்.

10 क्रींमनुस्वराट्—க்ரீம்மநுஸ்வராட்—

ப்ரபஞ்சத்தில் கணக்கற்று விரவி இயங்கிக் கொண்டிருக்கும் ஸகல அண்டங்களையும் க்ரீம்கார மந்த்ர ஒலியினாலேயே நிர்வஹித்தருளும் விராட் ஸ்வரூபிணி.

11. क्रींकारगर्भा—க்ரீம்காரகர்ப்பா—
3 3 4

க்ரீம்கார நாதமாகிய அரிய மறை பொருளைத் தன்னுள் கொண்டவள்; அதாவது அந்த பீஜத்தின் ஒலிவடிவமே தன் வ்யக்த ரூபமாகக் கொண்டவள்.

12. क्रींसंज्ञा—க்ரீம்ஸம்ஜ்ஞா—

க்ரீம்காரமே தன் அடையாளமாகவும் (ஸங்கேதம்) சிறப்புப் பெயராகவும் கொண்டவள்: அதாவது இந்த பீஜத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே தன் பூர்ண ஸ்வரூபமும் பக்தன் மனதில் ஆவிர்ப்பவிக்கச் செய்பவள்.

13. क्रींकारध्येयरूपिणी—க்ரீம்காரத்யேயரூபிணீ—
3

க்ரீம்காரத்தின் ஒலிவடிவத்திலேயே பக்தர்கள் த்யானிக்க வேண்டிய தன் பூர்ண ஸகுண ப்ரஹ்ம ஸ்வரூபம் பொருந்தியவளாதலால் அதனை ப்ரேம த்யானத்துடன் ஜபிக்கும் உபாஸகனை ஆட்கொண்டருளும் மாத்ருகாக்ஷர ஸ்வரூபிணி.

## 14. क्रींकारात्तमनुप्रौढा — க்ரீம்காராத்தமநுப்ரௌடா —

கேவலம் க்ரீம்காரத்தால் ஆன பிண்ட மந்த்ரத்தின் நாதமய ஸ்வரூபத்திலேயே தன் ஶக்தி முழுமையும் விரவியவள்.

## 15. क्रींकारचक्रपूजिता — க்ரீம்காரசக்ரபூஜிதா —

க்ரீம்காரத்தை ப்ரதான பீஜமாகக் கொண்ட ''வித்யாராஜ்ஞீ'' என்ற மந்த்ரத்தின் நிரூபணமாக அமைந்த காலீ சக்ரத்தில் க்ரமப்படி ஆராதிக்கப்படுபவள்; அதாவது, தன் பரிவார தேவதைகள் தன் சக்ரத்தில் ஆங்காங்கு, ஸப்தாவரண க்ரம ப்ரகாரம் அந்த அந்த ஸ்தானங்களில் ப்ரதிஷ்டையாகி அமர்ந்துள்ள நிலையில், அவர்களை முறைப்படி ஸாதகன் ஆராதித்த பிறகே தனக்குச் செய்யும் ஆராதனத்தை ஏற்று மகிழ்பவள்.[1]

## 16. क्रींकारलालनानन्दा — க்ரீம்காரலாலனானந்தா —

கொஞ்சப்பட்ட குழந்தை அக்கணமே மனமலர்ச்சியும் மகிழ்ச்சியும் அடைந்து விடுவது போல், க்ரீம்காரத்தை ப்ரேம ரஸத்துடன் ஜபித்த மாத்திரத்திலேயே, ஶைஶவ பாவத்தில் பொங்கும் ஆனந்தம் கொண்டருளும் ப்ரேம மூர்த்தி.

## 17. क्रींकारालापतोषिणी — க்ரீம்காராலாபதோஷிணீ —

க்ரீம்காரத்தின் ஜபத்தால் மட்டுமல்லாமல் அந்த மந்த்ரத்தின் விமர்ஶத்தாலும் பெரிதும் உகப்பு அடைபவள்: அதாவது, தன் பக்தர்கள் தம் குருவுடனும், அவருடைய ஸந்நிதானத்தில் தம் ஸஹயோகினிகளுடனும், தன்னைப் பற்றிய (ஶக்திஶிவி) தத்துவங்களை விஸ்தாரமாக வ்யவஹார விமர்சம் செய்து உண்மைகள் அறிந்து தெளிவதைக் கண்டு பெரிதும் மகிழ்வடைபவள்.[2]

---

[1] आराधनं देवतानां चक्रावरणकल्पश: । तत्तत्स्थानस्थितानां च वामत: परित: क्रमात् ।।
विद्याराज्ञीप्रयोगेण पद्धत्या मन्त्रपूर्णया । निर्वर्त्य पूजयेद्विन्दौ देवीं दक्षिणकालिकाम् ।।
—காலீதந்த்ரம்.

[2] आलाप—परस्परकथने । एकस्य कश्चित्प्रति कथने तेन तत्कथनप्रेरणात् तं प्रति कथ्यते—इति परस्परकथनस्य इतरेतरकथनप्रयोज्यत्वात् तथात्वम् । परस्परकथनोपकथने आभाषणे प्रवृत्तिहेतुत्वं प्रतीयते ।।
—வாசஸ்பத்யம் — 823

स्यादाभाषणमालाप: ।। அமரகோஶம்–341

*18.* **क्रींकलानादबिन्दुस्था—க்ரீம்கலாநாதபிந்துஸ்தா—**

3 3 3 2

சக்ரமேருவின் பிந்துவில் உறைவது போல் க்ரீம்காரத்தின் அழகிய நாதத்தில் ப்ரியவாஸம் கொண்டவள்.[1]

---

குறிப்பு:—ஸங்கீத சாஸ்த்ரத்தில் ஒரு ஸங்கீத வித்துவான் ஒரு ராகத்தை மிக விரிவாகவும், ஆழமாகவும், நிதானமாகவும் நின்று நின்று ப்ரஸ்தரித்து நாத இன்பத்தில் திளைத்து ஸூசித்தல் ''ஆலாபம்'' எனப்படும்: அதாவது, அந்த வித்துவான், ஒரு ராக அமைப்பில், அதன் ஸ்தாயியில் அமர்ந்துள்ள ஸ்வரங்களில் ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றுடனும் கொள்ளும் ஸம்பந்தத்தால் ஏற்படும் இனிய ரஸமானது பாடுபவனுக்கும் கேட்பவனுக்கும் மனதில் அவிச்சின்னமாக விரவி, ஆங்ஙனமாக தொடர்ச்சியாக ஆனந்த உணர்ச்சி சுழன்று சூழ்ந்து, நாதமய நுகர்ச்சியே இடைமருது இவ்புறத்திக் கொண்டே பயின்று பயின்று மிகுவது-போல, குருவின் ஸந்நிதியில் (அதாவது தன் ஸந்நிதானத்தில்) அமர்ந்துள்ள அவர்களை (யோகினிகளை) ஊக்குவித்து வழிகாட்ட, ஸாராம்சமான ப்ரச்னைகளை, பரஸ்பரம் விஸ்தாரமான ஆழ்ந்த சர்ச்சைகள் வாயிலாக ஆய்ந்து, அவற்றின் அடிப்படை நிலைகளைச் சீர்தூக்கி விமர்சித்து அறிந்து தெளிந்து, தூய ஜ்ஞானம் அடைந்து உய்ய அநுக்ரஹிக்கும் ப்ரகாச விமர்ச ரூபிணி.

रागालप्तिरालप्ति: प्रकटीकरणं मतम् ।। —ஶார்ங்கதேவரின் ஸங்கீதரத்னாகரம்–III–189.

[1]குறிப்பு:—அதாவது, பரமாத்மாவாகிய புருஷனின் உபாதிகளாகிய பதினாறு கலைகளிலும், ஸச்சிதானந்த ஸ்வரூபமான நாதத்திலும், க்ரியா ப்ராதான்ய லக்ஷணங்கொண்ட சித் சக்தியின் ஸர்வோத்க்ருஷ்டமான அவஸ்தையாகிய பிந்துவிலும் எப்பொழுதுமே லீலா-விநோதமாக ஊடாடிக்கொண்டிருப்பதிலேயே மட்டிலா மகிழ்ச்சி கொள்பவள்—என்பது கருத்து:

प्राणश्श्रद्धा तथा व्योम वायुश्च तेज एव च । जलं पृथ्वीन्द्रिये चैव मनश्चान्नं तथैव हि ।।
वीर्यं तपश्च मन्त्रश्च कर्म्म लोकश्च नाम वै । षोडशैता: कलास्सर्वा: पुरुषोपाधयस्स्मृता: ।।
—தாரகாம்ருதஸாகரம்.

सच्चिदानन्दविभवात्सकलात्परमेश्वरात् । आसीच्छक्तिस्ततो नादस्तस्माद्बिन्दुसमुद्भव: ।।
नादो बिन्दुश्च बीजञ्च स एव त्रिविधो मत: । भिद्यमानात्पराद्बिन्दोरुभयात्मारवोऽभवत् ।।
स रवश्श्रुतिसम्पन्नश्शब्दब्रह्माभवत्परम् ।। —ஶாரதாதிலகம்.

बिन्दु: नादजन्ये क्रियाप्राधान्यलक्षणे चिच्छक्तेरवस्थाभेदे ।। —வாசஸ்பத்யம் - 4575

सा तत्त्वसंज्ञा चिन्मात्रज्योतिषस्सन्निधेस्तदा ।
विचिकीर्षुर्घनीभूता क्वचिदभ्येति बिन्दुताम् ।। —ராகவ பட்டர்.

अभिव्यक्ता परा शक्तिरविनाभावलक्षणा । अखण्डपरचिच्छक्तिजाता चिद्रूपिणी विभु: ।।
समस्ततत्त्वभावेन विवर्त्तेच्छासमन्विता । प्रयाति बिन्दुभावञ्च क्रियाप्राधान्यलक्षणम् ।।
—ராகவ பட்டர்.

रौद्री बिन्दोस्ततो नादाज्ज्येष्ठा बीजादजायत । समेताभ्यस्समुत्पन्ना रुद्रब्रह्मरमाधिपा: ।।
—ஶாரதாதிலகம்.

बिन्दुश्शिवात्मको बीजं शक्तिर्नादस्तयोर्मिथ: । समवायस्समाख्यातस्सर्वागमविशारदै: ।।
—ஶாரதாதிலகம்.

19. क्रींकारचक्रवासिनी—க்ரீம்காரசக்ரவாஸினீ—

க்ரீம்காரத்தை முக்கிய பீஜமாகக் கொண்ட "வித்யாராஜ்ஞீ" என்ற மந்த்ரத்தின் ப்ரஸ்தாரமான காலீ சக்ரத்தில் மகிழ்ச்சியாக உறைபவள். அதாவது, காலீ சக்ரத்தில் பூபுரம் முதற்கொண்டு அதன் பிந்து ஸ்தானம் வரையில் எல்லா ஸ்தலங்களிலும் விலாஸமாக உறைந்தருள்பவள்.

20. क्रींकारलक्ष्मी:—க்ரீம்காரலக்ஷ்மீ:—

க்ரீம்காரத்தின் ஒலியாகிய வித்யுத் ஶக்தி ஒரு மஹாஸ்போடமாகி மின்னலின் பேரொளியாகி, கண்ணுல் பார்க்கமுடியாமல் கூசும்படி ஜ்வலிக்கும் பேரழகி.

21. क्रींशक्ति:—க்ரீம்ஶக்தி:—

க்ரீம்காரத்தின் ஒலியின் ஒட்டத்திலேயே தன் ஸர்வ ஶக்தியும் ப்ரஸரித்து மகிழும் பராசக்தி மூர்த்தி.

22. क्रींकारमनुमण्डिता—க்ரீம்காரமநுமண்டிதா—

க்ரீம்கார மந்த்ரமே தன் ப்ரதான பூஷணமாகக் கொண்டவள். அதாவது, அக்ஷமாலையில் மேருமணி மிக ப்ரதானமாவதுபோல், மாத்ருகா மண்டலத்திலிருந்து உத்தாரணம் செய்து உருவாக்கப்பட்ட பீஜங்கங்களுள் க்ரீம்காரமே தனக்கு மிக உகந்த ஆபரணமாகப் பூணுபவள்.

23. क्रींकारानन्दसर्वस्वा—க்ரீம்காரானந்தஸர்வஸ்வா—

க்ரீம்காரத்தை ஜபிப்பதால் உண்டாகும் பேரானந்தமே வடிவானவள். அதாவது, புருஷார்த்தங்களுள் மோக்ஷமே நிரதிசயானந்தம் ஆனதால் க்ரீம்காரத்தின் ஜபத்தால் விளையும் பேரானந்தத்தையே தன் பூரண ஸ்வரூபமாகக் கொண்ட ஆனந்த மூர்த்தி.

24. क्रींज्ञेयलक्ष्यमात्रगा—க்ரீம்ஜ்ஞேயலக்ஷ்யமாத்ரகா—

"க்ரீம்" என்ற மந்த்ரத்தை ஜபிப்பதன் மூலம் நாம் அடையக்கூடிய ஆத்மஜ்ஞானமும் அதன் வாயிலாக அடையக்கூடிய மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் நமக்கு அளித்தருளும் அன்பே வடிவான தாய்.

25. क्रींकारबिन्दुपीठस्था—க்ரீம்காரபிந்துபீடஸ்தா—

க்ரீம் காரத்தை ப்ரதான பீஜமாகக் கொண்ட வித்யாராஜ்ஞீயின் சக்ரமேருவின் பிந்துஸ்தானமே தனது ஶாஶ்வதமான பீடமாகக் கொண்டருளும் மந்த்ரமூர்த்தி.

26. क्रींकारनादमोदिनी—க்ரீம்காரநாதமோதினீ—

காலீப்ரணவமாகிய க்ரீம்காரத்தின் கம்பீரமான நாதத்தில் பேருவகை கொண்டு அருளும் நாதரூப ஸுந்தரீ.

27. **क्रींतत्त्वज्ञानविज्ञेया—க்ரீம்தத்த்வஜ்ஞானவிஜ்ஞேயா—**

க்ரீம்காரமாகிய காலீப்ரணவத்தின் தத்த்வரஹஸ்யத்தின் விமூதமான ஜ்ஞானத்தின் மூலமாகவே ஒருவாறு அறியத்தக்கவள்.[1]

28. **क्रींकारयज्ञपालिनी—க்ரீம்காரயஜ்ஞபாலினீ—**

க்ரீம்காரத்தை ப்ரயோகித்துச் செய்யும் யஜ்ஞங்களை (மந்த்ர ஜபத்தை) பரிபாலித்து ஸித்தி அருள்பவள்[2].

29. **क्रींकारलक्षणानन्दा—க்ரீம்காரலக்ஷணனந்தா—**[3]

க்ரீம்கார மந்த்ரத்தின் விமர்மத்தால் பெரிதும் களிப்புக் கொண்டு ஸாதகனை ஆட்கொண்டருளும் கருணமூர்த்தி.

30. **क्रींकारलयलालसा—க்ரீம்காரலயலாலஸா—**

க்ரீம்கார மந்த்ரத்தை ப்ரேமையுடன் ஜபிப்பவர்களை ஆனந்தமாகக் கொஞ்சுபவள்: அதாவது, யாராக இருந்தாலும், கேவலம் இந்த மந்த்ரத்தை ஜபிப்பதால் மட்டுமே, மழலையாகப் பேசும் தன் சிறு குழந்தையைத் தாயானவள் கொஞ்சுவதுபோல், தன் பக்தனை ஆட்கொண்டு அவனுக்கு ஜீவன் முக்தி அருளும் க்ருபைக்கடல்.

क्रींमेरूमध्यगास्थांना क्रींकाराद्यवरार्णभूः ।
क्रींकारवरिवस्याढ्या क्रींकारगानलोलुपा ।। ७ ।।

क्रींकारनादसम्पन्ना क्रींकारैकाक्षरात्मिका ।
क्रीमादिगुणवर्गात्तत्रितयाद्याहुतिप्रिया ।। ८ ।।

---

[1]शुद्धप्रणव ओङ्कारो ह्रीं शक्तिप्रणवस्तथा । क्रीं कालीप्रणवो ज्ञेयो ब्रह्मणो व्यञ्जनं स्मृतम् ।।
क्रीं हि साक्षात्परं ब्रह्म क्रीं शक्तिर्ब्रह्मितं शिवम् ।। —காலீதந்த்ரம்

[2]जप—मन्त्रादेरावृत्तौ । —வாசஸ்பத்யம்—3031

यज्ञानां जपयज्ञोऽस्मि ।। —பகவத்கீதை X–25

मनस्संहृत्य विषयान्मन्त्रार्थगतमानसः । न द्रुतं न विलम्बश्च जपेन्मौक्तिकपङ्क्तिवत् ।। जपस्स्यादक्षरावृत्तिर्मानसोपांशुवाचकैः । धिया यदक्षरश्रेणीं वर्णस्वरपदात्मिकाम् ।। उच्चरेदर्थमुद्दिश्य मानसस्स जपस्स्मृतः । जिह्वोष्ठौ चालयेत्किञ्चिद्देवतागतमानसः ।। किञ्चिच्छ्रवणयोग्यस्स्यादुपांशुस्स जपस्स्मृतः । मन्त्रमुच्चारयेद्वाचा वाचिकस्स जपस्स्मृतः ।। उच्चैर्जपाद्विशिष्टस्स्यादुपांशुर्दशभिर्गुणैः । जिह्वाजपश्शतगुणस्साहस्रो मानसस्स्मृतः ।। जिह्वाजपस्स विज्ञेयः केवलं जिह्वया बुधैः ।।
—தந்த்ரஸாரம்.

क्रींक्लिन्नरमणानन्दमहाकालवराङ्गना ।

क्रींलास्यताण्डवानन्दा क्रींकारभोगमोक्षदा ॥ ९ ॥

क्रींकारयोगिनीसाध्योपास्तिसर्वस्वगोचरा ।

क्रींकारमातृकासिद्धविद्याराज्ञीकलेवरा ॥ १० ॥

हूंकारमन्त्रा हूंगर्भा हूंकारनादगोचरा ।

हूंकाररूपा हूंकारज्ञेया हूंकारमातृका ॥ ११ ॥

हूंफट्कारमहानादमयी हूंकारशालिनी ।

हूंकारजपसम्मोदा हूंकारजापवाक्प्रदा ॥ १२ ॥

க்ரீம்மேருமத்$_4$யகா$_3$ஸ்தா$_2$னா க்ரீம்காராத்$_3$யவரார்ணபூ$_4$: ।

க்ரீம்காரவரிவஸ்யாட்$_4$யா க்ரீம்காரகா$_3$னலோலுபா ॥ 7 ॥

க்ரீம்காரநாத$_3$ஸம்பன்னா க்ரீம்காரைகாக்ஷராத்மிகா ।

க்ரீமாதி$_3$கு$_3$ணவர்க்காத்$_3$த$_3$த்ரிதயாத்$_3$யாஹூதிப்ரியா ॥ 8 ॥

க்ரீம்க்லின்னரமணானந்த$_3$மஹாகாலவராங்க$_3$னா ॥

க்ரீம்லாஸ்யதாண்ட$_3$வானந்தா$_3$ க்ரீம்காரபோ$_4$க$_3$மோக்ஷதா$_3$ ॥ 9 ॥

க்ரீம்காரயோகி$_3$னீஸாத்$_4$யோபாஸ்திஸர்வஸ்வகோ$_3$சரா ।

க்ரீம்காரமாத்ருகாஸித்$_3$த$_4$வித்$_3$யாராஜ்ஞீகலேவரா ॥ 10 ॥

ஹூம்காரமந்த்ரா ஹூம்க$_3$ர்ப்$_3$பா$_4$ ஹூம்காரநாத$_3$கோ$_3$சரா ।

ஹூம்காரரூபா ஹூம்காரஜ்ஞேயா ஹூம்காரமாத்ருகா ॥ 11 ॥

ஹூம்பட்$_2$காரமஹாநாத$_3$மயீ ஹூம்காரஶாலினீ ।

ஹூம்காரஜபஸம்மோதா$_3$ ஹூம்காரஜாபவாக்ப்ரதா$_3$ ॥ 12 ॥

**31. क्रींमेरुमध्यगास्थाना—க்ரீம்மேருமத்$_4$யகா$_3$ஸ்தா$_2$னா—**

க்ரீம் காரத்தை ப்ரதான பீஜமாகக் கொண்ட வித்யாராஜ்ஞியின் சக்ரயந்த்ர மேருவின் மத்யஸ்தானமாகிய பிந்து பீடத்தைத் தன் உறைவிடமாகக் கொண்டு அங்கேயே நித்யவாஸம் செய்தருளும் சக்ரேஶ்வரீ.

32. क्रींकाराद्यवर्णभूः—க்ரீம்காரத்யவரார்ணபூ:—

எல்லா அண்டங்களிலும் விரவியுள்ள ஸகல சேதனர்களின் எண்ண அலைகளினூடே பாய்ந்தோடும் ஒலிகள் எல்லாம், இந்த சராசரங்களுக்கெல்லாம் ஆதி மூல ஶக்தியாகிய காலியின் ப்ரணவமாகிய க்ரீம்(क्रीं)காரத்திலிருந்து சுரந்து ப்ரவஹிப்பன. மேலும் இந்த க்ரீம்(क्रीं)காரத்தாரையில் ஆதியில் அமர்ந்துள்ள க(क)கார வர்ணத்தின் ஒலியே தேவியின் வித்யுத் ஶக்தியின் உத்பத்தி ஸ்தானமாகும். இதினின்று ஸ்புரித்து நாற்புறமும் சிதறிச் சூழ்ந்து பரவும் சுடர்க் கதிர்களும் நாத அலைகளுமே இந்த எல்லா அண்டங்களையும் ஆற்றுவித்தலான், இந்த க(क)கார மாத்ருகையே, ஆதி பராஶக்தியின் வழிபாட்டில் ப்ரதானபூதமாக அமைந்த வித்யாராஜ்ஞீ மஹாமந்த்ரத்துக்கு அச்சாணி என்று பெறப்படுகிறது. ஆக, இங்ஙனமாக, இந்த க(क)காரத்தின் நாத ப்ரவாஹத்தின் ஸ்வரூபிணியானவள்—என்பது இந்த நாமத்தின் தாத்பர்யமாம்.

33. क्रींकारवरिवस्याढ्या—க்ரீம்காரவரிவஸ்யாட்யா—

க்ரீம்காரம் ஊடாடிக்கொண்டிருக்கும் தனது பூஜாபத்ததியில் பூர்ணத்ருப்தியுடன் உல்லாஸமாக இருந்துகொண்டு பலவகைத்தான லீலைகளைப் புரிந்து கொண்டு, தன் வித்யையை உபாஸிக்கும் பாக்கியசாலியான தன் பக்தனை மஹாயோகியாக ஆக்கி அருளும் கருணைரஸ லிங்கு.

34. क्रींकारगानलोलुपा—க்ரீம்காரகானலோலுபா—

''ப்ரபஞ்சத்தில் ப்ரவஹிக்கும் ஒலிகளெல்லாம் தேவியின் ப்ரணவமாகிய க்ரீம்காரத்தின் ப்ரவாஹ பரிணாமங்களே'' என்ற மஹத்தான உண்மையின் உணர்ச்சியுடன் நிகழும் கானத்தில் மகிழ்பவள்: அதாவது, வைதிக, லௌகிக கானங்களின் அதிஷ்டான தேவதை.

35. क्रींकारनादसम्पन्ना—க்ரீம்காரநாதஸம்பன்னா—

க்ரீம்காரத்தின் நாதம் எழும்பிய மாத்திரத்திலேயே பக்தர்களின் உபாஸனைக்கு எளிதாகக் கிடைத்திடுபவளான ஸௌலப்பிய மூர்த்தி.

36. क्रींकारैकाक्षरात्मिका—க்ரீம்காரைகாக்ஷராத்மிகா—

''க்ரீம்'' என்ற பீஜத்தின் ஒலியின் ஓட்டத்தின் மூலமே எல்லா அண்டங்களிலும் விரவி அவற்றை நிர்வஹிப்பவள்.

37. क्रीमादिगुणवर्गात्तत्रितयाद्याहुतिप्रिया — க்ரீமாதிகுணவர்க்காத்தத்ரிதயாத்யாஹுதிப்ரியா—

வித்யாராஜ்ஞியும் காலீ காயத்ரியும் ஸம்புடிதமான ஸ்வாத்மார்ப்பணுஹு-தி மந்த்ரத்தின் *132 - 396 - 484 - 792 - 1188 - 1452 - 2376 - 2904 - 3564 - 4356 - 4752– 5808 - 7128 - 8712 - 10,692 - 11,616 - 13,068 - 14, 256*—......—என்றவாறு உரு-வாகும் கணக்கிலான ஆவர்த்த ஸங்க்யை அளவில் செய்யப்படும் ஹோமங்களில் பெரிதும் மகிழ்பவள்.*

**38. क्रींक्लिन्नरमणानन्दमहाकालवराङ्गना — க்ரீம்க்லின்னரமணுனந்தமஹாகால-வராங்கனு—**

வீர்யமும் இன்பமும் ஒருங்கிணைந்து ப்ரவஹிக்கும் ''ரஸஜ்ஞா'' என்ற ''க்ரீம்''-கார பீஜம் ஆதியில் ப்ரதிஷ்டையாகியுள்ள வித்யாராஜ்ஞியை மிக ப்ரேமையுடன் ரஸித்து இடையருது உபாஸிக்கும் மஹாகாலருடன் எப்பொழுதும் இரண்டறக் கலந்து அவிச்சின்னமான சேர்க்கையில் இன்புறுபவளான ஆதிபராஶக்தி மூர்த்தி.

**39. क्रींलास्यताण्डवानन्दा—க்ரீம்லாஸ்யதாண்டவானந்தா—**

எப்பொழுதுமே தன் விருப்பப்படியே நடந்து கொண்டு எவ்வகையிலும் தன் பூரண வஶத்திலேயே இயங்கி மகிழ்விக்கும் தன் அன்பு நாயகரான ஸ்ரீமஹாகாலரின் ஹ்ருதயத்தையே நடன அரங்காகவும் க்ரீம்காரத்தையே தாளகதியாகவும் கொண்டு ஸ்த்ரீ நடனமாகிய லாஸ்யமும் புருஷ நடனமாகிய தாண்டவமும் மாறிமாறி வரும் பர்யாய க்ரமமாக ஸதா ஆனந்த நடனம் புரிந்து மகிழ்பவள்.

**40. क्रींकारभोगमोक्षदा—க்ரீம்காரபோகமோக்ஷதா—**

வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு போகங்கள் நிறைந்த வாழ்வும் ஜீவன் முக்தி-யையும், அதாவது இஹபர ஸுகங்களை, அவிச்சின்னமாக அருள்பவள்.

**41. क्रींकारयोगिनीसाध्योपास्तिसर्वस्वगोचरा— க்ரீம்காரயோகினீஸாத்யோபாஸ்தி-ஸர்வஸ்வகோசரா—**

வரிவஸ்யா க்ரமத்தில் நடுநாயகமாக விளங்கும் மூலமந்த்ரமானது தன் னுடைய அபர ஸ்வரூபமே ஆவதால், தன்னுடைய எல்லா ஶக்திகளுமே அப்படியே பூரண உருவமாக உள்ள வித்யாராஜ்ஞியை உபாஸிக்கும், தன் ப்ரேமை பொங்கி வழியும், யோகினிகளின் எல்லா பூஜாக்ரமங்களிலும் லீலாவிலாஸமாக ஊடாடி மகிழும் ப்ரேமமூர்த்தி.

---

*समिदाज्यान्नदूर्वार्ककदलीकरवीरकैः । कञ्जरक्तजपाहोमैर्योगिन्याहुतिमोदिता ।।...
द्वाशविंशत्यङ्कषट्कत्रिकवर्गगुणसङ्ख्यया । गायत्त्रीसम्पुटस्वात्मार्पणाहुत्या च नद्धया ।।
त्रितार्य्या च कुमार्य्यास्तु विद्याराज्ञ्योपबृंहया ।। —காலீதந்த்ரம்

**180. केशवादिसमर्चिता—கேஶவாதி3ஸமர்ச்சிதா—**

மஹாவிஷ்ணு முதலிய முப்பத்து முக்கோடி தேவர்களாலும் ஆராதிக்கப்படுபவள்.

**181. केशकालाभ्रसौन्दर्य्या—கேஶகாலாப்4ரஸௌந்த3ர்ய்யா—**

நீருண்ட கரிய மேகம்போல் அழகான கூந்தற் பரப்பைக் கொண்ட பேரழகி

**182. केवलात्मविलासिनी—கேவலாத்மவிலாஸினீ—**

பக்தர்களுக்குத் தெளிவான ஆத்மஜ்ஞானமும் அதன் மூலம் கைவல்ய முக்தி ஸித்தியும் அருள்பவள்.

**183. क्रींकारभवनोद्युक्ता—க்ரீம்காரப4வனோத்3யுக்தா—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடனத்தால் பெருகிய காலீ சக்ரத்தில் விலாஸமாக லீலைகள் புரிந்து மகிழ்பவள்.

**184. क्रींकारैकपरायणा—க்ரீம்காரைகபராயணா—**

அவளது மந்த்ரங்களில் ஸம்புடமாகி உள்ள எல்லா பீஜங்களிலும் மிகப்ரதானமான க்ரீம்காரத்தால் மட்டுமே எளிதில் அடையத்தக்கவள்.

**185. क्रींमुक्तिदानमन्दारा—க்ரீம்முக்திதா3னமந்தா3ரா—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் உபாஸகர்களுக்கு முக்தி அருள்வதில் கல்பக வ்ருக்ஷம் போன்றவள்.

**186. क्रींयोगिनीविलासिनी—க்ரீம்யோகி3னீவிலாஸினீ—**

க்ரீம்காரம் ஸ்போடமாகிப் பெருகிய வித்யாராஜ்ஞியின் உபாஸகர்களாகிய யோகினிகளுடன் சக்ரத்தின் எல்லா இடங்களிலும் விலாஸ லீலைகள் புரிந்து மகிழ்பவள்.

**187. क्रींकारसमयाचारतत्परप्राणधारिणी—க்ரீம்காரஸமாயாசாரதத்பரப்ராண-தா4ரிணீ—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யா ராஜ்ஞீ உபாஸன அநுஷ்டான க்ரமத்தில் லயித்துள்ள யோகினிகளுக்கு திர்க்காயுஸ்ஸும், புருஷார்த்த ஸித்தியும், ஜீவன் முக்தியும் அருள்பவள்.

---

1. ஸ்வதர்ம்ம ஆசரணம், ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் தம் தம் இனத்தவர்க்கு விதிக்கப்பட்ட கர்மாநுஷ்டான க்ரமங்கள், இவற்றினின்று சற்றும் வழுவாமல்,

क्रींजपासक्तहृद्देशवासिनी क्रींमनोहरा ।
क्रींकारमन्त्रालङ्कारा क्रींचतुर्वर्गदायिका ।। ४९ ।।
क्रींकौलमार्गसम्पन्नपुरश्चरणदोहदा ।
क्रींकारमन्त्रकूपारोत्पन्नपीयूषशेवधिः ।। ५० ।।
क्रींकाराद्यन्तहूंह्रींफट्स्वाहादिपरिवर्त्तनी ।
क्रींकारामृतमाधुर्य्यरसज्ञारसनाग्रगा ।। ५१ ।।
क्रींजापदिव्यराजीवभ्रमरी क्रींहुताशनी ।
क्रींकारहोमकुण्डाग्निजिह्वाप्रत्यक्षरूपिणी ।। ५२ ।।
क्रींसम्पुटार्चनाधारणानन्दस्वान्तलासिनी ।
क्रींकारसुमनोग्रन्थमालिकाप्रियधारिणी ।। ५३ ।।
क्रींकारैकाक्षरीमन्त्रस्वाधीनप्राणवल्लभा ।
क्रींकारबीजसन्धानजपध्यानवशंवदा ।। ५४ ।।
क्रींकारोज्जृम्भनादान्तमन्त्रमात्रस्वतन्त्रगा ।। ५४½ ।।

*க்ரீம்ஜபாஸக்தஹ்ருத்தேஶவாஸினீ க்ரீம்மனோஹரா ।*
*க்ரீம்காரமந்த்ராலங்காரா க்ரீம்சதுர்வர்க்கதாயிகா ।। 49 ।।*
*க்ரீம்கௌலமார்க்கஸம்பன்னபுரஶ்சரணதோஹதா ।*
*க்ரீம்காரமந்த்ரகூபாரோத்பன்னபீயூஷஶேவதி: ।। 50 ।।*

---

ஶக்தி தேவதை உபாஸனம் நிகழ்த்தும் ஆசரணை முறைக்கு "குலாசாரம்" என்று பெயர். அதுவே "ஸமயாசாரம்" எனப்படும் :

अथाचारं प्रवक्ष्यामि यत्कृतेऽमृतमश्नुते । सर्वभूतहिते युक्तस्समयाचारपालकः ।। अनित्यकर्म-सन्त्यागी नित्यानुष्ठानतत्परः । मन्त्राराधनमात्रेण शिवभावेन तत्परः ।। परस्यां देवतायां तु सर्वकर्म्मनिवेदकः । अन्यमन्त्रार्चनश्रद्धाम् अन्यमन्त्रप्रपूजनम् ।। कुलस्त्रीवीरनिन्दाञ्च तद्द्रव्य-स्यापहारणम् । स्त्रीषु रोषं प्रहारञ्च वर्जयेन्मतिमान् सदा । स्त्रीमयञ्च जगत्सर्वं स्वयम्भूवत्तथा भवेत् । पेयञ्चर्व्यं तथा चूष्यं भक्ष्यं लेह्यं गृहं सुखम् ।। सर्वञ्च युवतीरूपं भावयेन्मतिमान् सदा । कुलजां युवतीं वीक्ष्य समस्कुर्यात्समाहितः ।। यदि भाग्यवशाद्देवि कुलदृष्टिः प्रजायते । तदैव मानसीं पूजां तत्र तासां प्रकल्पयेत् ।।
—காலீதந்த்ரம்.

க்ரீம்காராத்யந்தஹுஒம்ஹ்ரீம்பட்ஸ்வாஹாதிபரிவர்த்தனீ ।
க்ரீம்காராம்ருதமாதுர்ய்யரஸஜ்ஞாரஸஜ்ஞக்ரகா ॥ 51 ॥

க்ரீம்ஜாபதிவ்யராஜீவப்ரமரீ க்ரீம்ஹுதாஶனீ ।
க்ரீம்காரஹோமகுண்டாக்னிஜிஹ்வாப்ரத்யக்ஷரூபிணீ ॥ 52 ॥

க்ரீம்ஸம்புடார்ச்சனதாரஜ்ஞனந்தஸ்வாந்தலாஸினீ ।
க்ரீம்காரஸம்மனோக்ரந்தமாலிகாப்ரியதாரிணீ ॥ 53 ॥

க்ரீம்காரைகாக்ஷரீமந்த்ரஸ்வாதீனப்ராணவல்லபா ।
க்ரீம்காரபீஜஸந்தானஜபத்யானவஶம்வதா ॥ 54 ॥

க்ரீம்காரோஜ்ஜ்ரும்பநாதாந்தமந்த்ரமாத்ரஸ்வதந்த்ரகா ॥ 54½ ॥

188. क्रींजपासक्तहृद्देशवासिनी—க்ரீம்ஜபாஸக்தஹ்ருத்தேஶவாஸினீ—

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரேமையுடன் ஜபிக்கும் யோகினிகளின் ஹ்ருதயத்தில் ஸதா வஸித்தருளும் மந்த்ரமூர்த்தி.[1]

189. क्रींमनोहरा—க்ரீம்மனோஹரா—

---

1. ஜபம் செய்யும்போது, பொன், அல்லது முத்து, பவளம் முதலிய ரத்ன-மணி அல்லது ருத்ராக்ஷம், ஸ்படிகம், தாமரை மணி—இவற்ருலான அக்ஷமாலையைக் கையிற் கொண்டு—அல்லது, இவை இல்லாத நிலையில் கரமாலையைக் கொண்டு, ஒவ்வொரு ஸங்க்யைக்கு ஒவ்வொரு அக்ஷமாக [அல்லது பர்வ (விரற்கணு) வாக] உருட்டிக் கொண்டு, வஸ்த்ரத்தால் இரு கைகளையும் மறைத்துக்கொண்டு, மார்பகத்-தின் மத்தியில், ஹ்ருதய ஸ்தானத்தில், ஸங்க்யை எண்ணும் வலது கையை வைத்துக் கொண்டு, நிதானமாக, ஸங்க்யை விடாமல், எண்ணிக்கொண்டு, த்யான ஶ்லோகத்தில் நிர்த்தேஶிக்கப்பட்ட ஸ்வரூபத்தைப் பிரேமையுடன் மானஸிகமாக த்யானித்துக்கொண்டே, மௌனமாக ஜபிக்கவேண்டும்.

मुक्ताफलैर्विद्रुमेण रुद्राक्षैस्स्फटिकेन वा । हिरण्यरत्नमणिभिर्जप्ता शतगुणं भवेत् । . . .गणना सर्वथा कार्य्या सम्यगङ्गुलिपर्वभिः । . . .असङ्ख्यातन्तु यज्जप्तं सर्वं तदफलं स्मृतम् । . . .हृदये हस्तमारोप्य तिर्यक्कृत्वा कराङ्गुलीः । . . .आच्छाद्य वाससा हस्तौ दक्षिणेन सदा जपेत् ॥

—அக்னி புராணம்.

க்ரீம்காரத்தின் ஸ்போடமாகப் பெருகியுள்ள இந்த ப்ரபஞ்சத்திலுள்ள எல்லா ஜீவர்களின் மனத்தையும் தன்பால் ஈர்க்கும் ஆதிபராசக்தி.[1]

*190.* **क्रींकारमन्त्रालङ्कारा — க்ரீம்காரமந்த்ராலங்காரா —**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியைப் பூஷணமாகக் கொண்டு இலங்குபவள்.

*191.* **क्रींचतुर्वर्गदायिका—க்ரீம்சதுர்வர்க்கதாயிகா—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் உபாஸகர்களுக்கு சதுர்வித புருஷார்த்தங்களையும் வாரி வழங்கும் பெருவள்ளல்.

*192.* **क्रींकौलमार्गसम्पन्नपुरश्चरणदोहदा—க்ரீம்கௌலமார்க்கஸம்பன்னபுரஶ்சரண-தோஹதா—**

காலீத்ரிதாரியினின்று ஸ்போடமான உத்தமமான கௌலமார்க்கத்தின் விதி முறை வழுவாமல் பக்தர்கள் அநுஷ்டிக்கும் உபாஸனத்தில் அளவுகடந்த ப்ரேமை கொண்டவள்.[2]

**[2]குறிப்பு:—ஸஹஸ்ரநாமம் நாமங்கள் 856, 865, 866, 875, 876, 880, 881, 904, 983, 984, 985, 986, 989 பார்க்க.**

*193.* **क्रींकारमन्त्रकूपारोत्पन्नपीयूषशेवधिः—க்ரீம்காரமந்த்ரகூபாரோத்பன்னபீயூஷ-ஶேவதி:—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியாகிய ஸமுத்ரத்திலிருந்து அதன் ஸாராம்ஶமாக வெளிக்கிளம்பிய அம்ருதமயமான பொக்கிஷ வடிவானவள்.

*194.* **क्रींकाराद्यन्तहूंह्रींफटस्वाहादिपरिवर्त्तनी—க்ரீம்காராத்யந்தஹூம்ஹ்ரீம்பட்-ஸ்வாஹாதிபரிவர்த்தனீ—**

க்ரீம்(क्रीं)காரத்தை முன்னும் பின்னும் வைத்து "ஹூம் ஹ்ரீம் பட்ஸ்வாஹா" என்பது போன்ற பல வகைகளில் மாற்றியமைத்துக் கோவைப்படுத்தப்பட்ட தேவியின் பல்வேறு மந்த்ரங்களில் தன் ஸகல ஶக்திகளுடன் பூர்ணஸாந்நித்தியமாக இயங்குபவள்.

*195.* **क्रींकारामृतमाधुर्य्यरसज्ञारसनाग्रगा—க்ரீம்காராம்ருதமாதுர்ய்யரஸஜ்ஞாரஸ-ஞக்ரகா—**

---

1. ஸஹஸ்ரநாமம் 1000 ஆவது நாமத்தில் மறைந்துள்ள தத்துவம்: பரமாத்மா எல்லா ஜீவர்களையும் தன்பால் ஈர்க்கும் *சீலம்:* कृष विलेखने। विलेखनम् आकर्षणम्॥

"ரஸஜ்ஞா" என்ற சிறப்புப்பெயர் கொண்ட க்ரீம்(क्रीं)காரத்தை ப்ரேமையுடன் ஜபித்து அம்ருதத்துக்கு ஒப்பான அதன் சுவையை ரஸித்து மகிழும் யோகினி-களின் நுனி நாக்கில் எப்பொழுதும் உறைபவள்.

196. क्रींजापद्दिव्यराजीवभ्रमरी — க்ரீம்ஜாபதிவ்யராஜீவப்ரமரீ —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரேமையுடன் ஜபித்து மகிழும் யோகினிகளாகிய தேவகங்கையில் மலரும் அவர்களின் ஹ்ருதயமாகிய கமலத்தின் தேனை ரீங்காரத்துடன் (க்ரீம்காரத்துடன்) ரஸித்துக்கொண்டே சுழலும் பெண் வண்டு போன்றவள்.

197. क्रींहुताशनी — க்ரீம்ஹுதாஶனீ —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியைப் பிரயோகித்துச் செய்யப்படும் ஆஹுதிகளைத் தானே ப்ரத்யக்ஷமாக அந்த ஹோமாக்னி ஸ்வரூபத்தில் வந்து உட்கொண்டு அருள்பவள்.[1]

198. क्रींकारहोमकुण्डाग्निजिह्वाप्रत्यक्षरूपिणी — க்ரீம்காரஹோமகுண்டாக்னிஜிஹ்வா-ப்ரத்யக்ஷரூபிணீ —

க்ரீம் (क्रीं) காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரயோகித்து செய்யப்படும் ஆஹுதியில் ஹோமாக்னியின் ஜ்வாலைகளாலாகிய ஏழு நாக்குகளில் [(1) விஶ்வ-மூர்த்தி (2) ஸ்புலிங்கினீ (3) தூம்ரவர்ணா (4) மனோஜவா (5) லோஹிதா (6) கராலீ (7) காலீ] ப்ரத்யக்ஷமாக வந்து தானே ஹவிஸ்ஸுகளை உட்கொண்டு அருள்பவள்.[2]

199. क्रींसम्पुटार्चनाधारणानन्दस्वान्तलासिनी - க்ரீம்ஸம்புடார்ச்சனதாரணானந்த-ஸ்வாந்தலாஸினீ —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை அநுஷ்டான க்ரமங்களில் ப்ரயோகித்து தன்னை ஆழ்ந்த ப்ரேம த்யானத்துடன் உபாஸிக்கும் யோகினிகளின் மனதில் ஸதா ஆனந்தமாக லீலைகள் புரிந்து மகிழ்பவள்.[3]

---

[1]हिरण्यरेता हुतभुग्दहनो हव्यवाहनः । —அமரகோஶம் - 110

[2]विश्वमूर्त्तिस्फुलिङ्गिन्यौ धूम्रवर्णा मनोजवा ।
लोहितान्या कराली च काली तामस्य ईरिताः ।। ஶாரதாதிலகம்.

3. "தாரணை" என்பது ஆழ்ந்த தியானமாகும்: அதாவது சித்தத்தின் வ்யாபாரத்தை ஒருமுகப்படுத்தி நிலை நிறுத்தல். இது தொடர்ந்து, நீண்ட நேரம் நிற்கவேண்டும். இது பதஞ்ஜலி மஹர்ஷியினால் உபதேசிக்கப்பட்ட யோகதர்ஶனத்-தின் ஆறுவது அங்கமாகும்;

200. क्रींकारसुमनोग्रन्थमालिकाप्रियधारिणी—க்ரீம்காரஸுமனோக்ரந்தமாலிகாப்ரிய-தாரிணீ—

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியில் அடங்கிய பீஜங்களின் விளக்கமான நூல்களைத் தனக்கு இஷ்டமான மாலைகளாகத் தரிப்பவள்.

201. क्रींकारैकाक्षरीमन्त्रस्वाधीनप्राणवल्लभा—க்ரீம்காரைகாக்ஷரீமந்த்ரஸ்வாதீன-ப்ராணவல்லபா—

க்ரீம்காரம் மட்டுமே தனித்து உருவான பிண்ட மந்த்ரத்தை உபாஸித்துத் தன் ப்ராண வல்லபரான மஹாகாலரைத் தன் வசப்படுத்தியவள்.

202. क्रींकारबीजसन्धानजपध्यानवशंवदा—க்ரீம்காரபீஜஸந்தானஜபத்யானவசம்-வதா—

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரேமையான த்யானத்துடன் ஜபிக்கும் யோகினிகளுக்கு வசப்பட்டவள்.

203. क्रींकारोज्जृम्भनादान्तमन्त्रमात्रस्वतन्त्रगा—க்ரீம்காரோஜ்ஜ்ரும்பநாதாந்தமந்த்ர-மாத்ரஸ்வதந்த்ரகா—

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ ஒரு மஹாநாதமயமாக மலர்ந்து, யோகினியின் ஆஜ்ஞைக்கும் ப்ரஹ்மரந்த்ரத்திற்கும் இடையிலுள்ள ஒன்பது உபாதிஸ்தானங்களில் ஐந்தாவது மத்திய ஸ்தானமாகிய நாதாந்தத்தில் உபாஸகனின் ஏகாக்ர த்யானத்தால், ஸகுண ப்ரஹ்மரூபிணியாக தானும் யோகினீ மயமாகி ஸ்வதந்த்ரமாக மஹாகாலரைத் தன் வசப்படுத்தி குரு-குருபத்நினியாக உபாஸகனின் ப்ரஹ்மரந்த்ரத்தில் ஆனந்தமாக நித்தியவாஸம் செய்து மகிழ்பவள்.*

क्रींकारोन्नतविद्याङ्गशाक्ताचाराभिनन्दिनी ।। ५५ ।।
क्रीं रन्ध्रगुह्यभावज्ञयोगिनीपरतन्त्रगा ।
क्रींकालीतारिणीसुन्दर्य्यादिविद्यास्वरूपिणी ।। ५६ ।।

---

योगश्चित्तवृत्तिनिरोधः ।। . . . संयोगं योगमित्याहुर्जीवात्मपरमात्मनोः ।। . . . यमनियमासनप्राणायामप्रत्याहारधारणाध्यानसमाधयोऽष्टावङ्गानि ।। ...देशबन्धश्चित्तस्य धारणा ।।... नाभिचक्रे हृदयपुण्डरीके मूर्द्धिन ज्योतिषि नासिकाग्रे जिह्वाग्रे इत्येवमादिषु देशेषु बाह्ये वा विषये चित्तस्य वृत्तिमात्रेण बन्ध इति बन्धो धारणा ।। —பாதஞ்ஜலயோக ஸூத்திரபாஷ்யம்.

*முதற்பாகம் 18ஆம் பக்கம் பார்க்க.

क्रींकारपञ्चभूतात्मप्रापञ्चिककुटुम्बिनी ।
क्रींकारोर्व्यादिनिश्शेषतत्त्वकूटविजृम्भिणी ॥ ५७ ॥
क्रींकारमन्त्रशक्तिप्रविन्यस्तकृत्यपञ्चका ।
क्रींनिर्वर्त्तितविश्वाण्डकल्पप्रलयसाक्षिणी ॥ ५८ ॥
क्रींकारविद्युच्छक्तिप्रणुन्नसर्वजगत्क्रिया ।
क्रींकारमात्रसत्यादिसर्वलोकप्रचालिनी ॥ ५९ ॥
क्रींकारयोगसंलीनदहराकाशभासिनी ।
क्रींसंलग्नपरःकोटिसङ्ख्यामन्त्रजपप्रिया ॥ ६० ॥
क्रींकारबिन्दुषट्कोणनवकोणप्रतिष्ठिता ॥ ६०½ ॥

க்ரீம்காரோந்நதவித்3யாங்க3ஶாக்தாசாராபி4நந்தி3னீ ॥ 55 ॥
க்ரீம்ரந்4த்3ரகுஹ்4யபாவஜ்ஞயோகி3னீபரதந்த்3ரகா ।
க்ரீம்காலீதாரிணீஸுந்த3ர்ய்யாதி3வித்3யாஸ்வரூபிணீ ॥ 56 ॥
க்ரீம்காரபஞ்சபூ4தாத்மப்ராபஞ்சிககுடும்பி3னீ ।
க்ரீம்காரோர்வ்யாதி3நிஶ்ஶேஷதத்த்வகூடவிஜ்ரும்பி4ணீ ॥ 57 ॥
க்ரீம்காரமந்த்ரஶக்திப்ரவிந்யஸ்தக்ருத்யபஞ்சகா ।
க்ரீம்நிர்வர்த்திதவிஶ்வாண்ட3கல்பப்ரலயஸாக்ஷிணீ ॥ 58 ॥
க்ரீம்காரவித்3யுச்ச2க்திப்ரணுந்நஸர்வஜக3த்க்ரியா ।
க்ரீம்காரமாத்ரஸத்யாதி3ஸர்வலோகப்ரசாலினீ ॥ 59 ॥
க்ரீம்காரயோக3ஸம்லீனத3ஹராகாஶபா4ஸினீ ।
க்ரீம்ஸம்லக்3னபர:கோடிஸங்க்2யாமந்த்ரஜபப்ரியா ॥ 60 ॥
க்ரீம்காரபி3ந்து3ஷட்கோணநவகோணப்ரதிஷ்டி2தா ॥ 60½ ॥

**204. क्रींकारोन्नतविद्याङ्गशाक्ताचाराभिनन्दिनी—க்ரீம்காரோந்நதவித்3யாங்க3ஶாக்தா-ஸாராபி4நந்தி3னீ—**

• க்ரீம்காரம் ஸம்புடமான மஹோரங்கதமான மந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை உபாஸிக்கும் யோகினிகள் அநுஷ்டிக்கும் உபாஸன மார்க்கங்களில் அளவு கடந்த மகிழ்ச்சி அடைபவள்.

**205. क्रींरन्ध्रगुह्यभावज्ञयोगिनीपरतन्त्रगा—க்ரீம்ரந்த்$_4$ரகு$_3$ஹ்யபா$_4$வஜ்ஞயோகி$_3$னீபரதந்த்ரகா$_3$—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் உபாஸனத்தின் அநுஷ்டான க்ரமங்களின் மர்மங்களை நன்கு அறிந்த யோகினிகளுக்கு வசப்பட்டவள்.

**206. क्रींकालीतारिणीसुन्दर्यादिविद्यास्वरूपिणी—க்ரீம்காலீதாரிணீஸுந்த$_3$ர்ய்யாதி$_3$வித்$_3$யாஸ்வரூபிணீ—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ ஆகிய காலி வித்யை, தாரா, ஸுந்தரீ முதலிய தஶமஹா வித்யைகள் எல்லாவற்றின் சக்திகளும் ஒருங்கே கடனமான ஸமஷ்டி வித்யுத்ஶக்தி ஸ்வரூபிணீ.

**207. क्रींकारपञ्चभूतात्मप्रापञ्चिककुटुम्बिनी—க்ரீம்காரபஞ்சபூ$_4$தாத்மப்ராபஞ்சிககுடும்பி$_3$னீ—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஒலி ஓட்டத்தால், பஞ்சபூதங்களின் ஸ்போடமாகப் பெருகியுள்ள இந்த ப்ரபஞ்சம் பூராவும் விரவியுள்ள எல்லா ஜீவஸமூஹங்களாகிய தன் பெரும் குடும்பத்தைப் பராமரித்து அருளும் ஜகன்மாதா.

**208. क्रींकारोर्व्यादिनिश्शेषतत्त्वकूटविजृम्भिणी—க்ரீம்காரோர்வ்யாதி$_3$நிஶ்ஶேஷதத்த்வகூடவிஜ்ரும்பி$_4$ணீ—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஜபத்தால் மகிழ்ந்து ப்ருதிவீ முதலிய முப்பத்தாறு தத்துவங்களையும் வீர்யமாக மலர்ந்து இயங்கச் செய்து அருளும் பராஶக்தி மூர்த்தி.

**209. क्रींकारमन्त्रशक्तिप्रविन्यस्तकृत्यपञ्चका—க்ரீம்காரமந்த்ரஶக்திப்ரவிந்யஸ்தக்ருத்யபஞ்சகா—**

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் வீர்ய ப்ரபாவத்தால் இந்த எல்லா அண்டங்களையும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், அநுக்ரஹம், திரோதனம், ஆகிய ஐந்தொழில்கள் மூலம் பராமரித்து ரக்ஷித்து அருள்பவள்.

210. क्रींनिर्वर्त्तितविश्वाण्डकल्पप्रलयसाक्षिणी — க்ரீம்நிர்வர்த்திதவிஶ்வாண்டகல்ப-ப்ரலயஸாக்ஷிணீ —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாகப் பெருகியுள்ள எல்லா அண்டங்களையும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலிய ஐந்து தொழில்களைச் செய்து கொண்டே கால சக்ர ப்ரமணத்தை அதன் க்ரம ப்ரகாரம் நிகழ்த்தி அருளும் பராஶக்தி மூர்த்தி.

211. क्रींकारविद्युच्छक्तिप्रगुणसर्वजगत्क्रिया — க்ரீம்காரவித்யுச்சக்திப்ரகுணஸர்வ-ஜகத்க்ரியா —

எல்லா அண்டங்களினூடே ஓடி இயங்கும் மின்ஶக்தி மூலமாக நிகழும் எல்லாச் செயல்பாடுகளுக்கும் மூல காரணமான க்ரீம் காரத்தின் ஒலி ஓட்டமே வடிவானவள்.

212. क्रींकारमात्रसत्यादिसर्वलोकप्रचालिनी — க்ரீம்காரமாத்ரஸத்யாதிஸர்வலோக-ப்ரசாலினீ —

க்ரீம்காரத்தின் ஒலி ஓட்டத்தின் ஶக்தியினால் மட்டுமே ஸத்யலோகம் முதலிய ஸகல லோகங்களும் அடங்கிய எல்லா அண்டங்களையும் நடத்திச் செல்பவளான நிர்வாஹமூர்த்தி.

213. क्रींकारयोगसंलीनदहराकाशभासिनी — க்ரீம்காரயோகஸம்லீனதஹராகாஶ-பாஸினீ —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களின் யோக நிஷ்டையில் அவர்களின் தஹராகாஶமான ஹ்ருதய குகையில் ஸூர்யனைப் போல் எப்போதும் ஒளி வீசிக்கொண்டிருப்பளான ஜ்யோதிஷ்மதீ.

214. क्रींसंलग्नपरःकोटिसंख्यामन्त्रजपप्रिया — க்ரீம்ஸம்லக்னபர:கோடிஸங்க்யாமந்த்ர-ஜபப்ரியா —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியைக் கோடிக் கணக்கில் ஜபிப்பவர்-களிடம் அத்யந்தப்ரீதி கொண்டு அவர்களுக்கு ஜ்ஞானமும் ஆனந்தமும் மோக்ஷமும் அளித்தருளும் கருணைக்கடல்.

215. क्रींकारबिन्दुषट्कोणनवकोणप्रतिष्ठिता — க்ரீம்காரபிந்துஷட்கோணநவகோண-ப்ரதிஷ்டிதா —

க்ரீம்காரத்தின் ஸ்போடமான காலீ சக்ரத்தின் பிந்து, ஷட்கோணம், நவகோணம், வ்ருத்தம், அஷ்டதளம், பூபுரம், ரேகைகள், அந்தராலங்கள் ஆகிய எல்லா ஸ்தலங்களிலும் கண்ணுக்குப் புலப்படாத, த்யான மூலமே ஸாக்ஷாத்கரிக்கக்-கூடிய க்ரீம்கார ஒலி வடிவாகவே பூர்ண ஸாந்நித்தியமாக விளங்குபவள்.

क्रींकारवृत्तपद्माष्टदलभूपुरनिष्ठिता ।। ६१ ।।
क्रींकारजापभक्तौघनित्यनिस्सीमहर्षदा ।
क्रींत्रिपञ्चारचक्रस्था क्रींकाल्युग्रादिसेविता ।। ६२ ।।
क्रींकारजापहृद्व्योमचन्द्रिका क्रींकरालिका ।
क्रींकारब्रह्मरन्ध्रस्थब्रह्मज्ञेयस्वरूपिणी ।। ६३ ।।
क्रींब्राह्मीनारसिंह्यादियोगिन्यावृतसुन्दरी ।
क्रींकारसाधकौन्नत्यसामोदसिद्धिदायिनी ।। ६४ ।।
हूंकारतारा हूंबीजजपतत्परमोक्षदा ।
हूंत्रैविद्यधराम्नायान्वीक्षिक्यादिप्रदायिका ।। ६५ ।।
हूंविद्यासाधनामात्रचतुर्वर्गफलप्रदा ।
हूंजापकत्रयस्त्रिंशत्कोटिदेवप्रपूजिता ।। ६६ ।।
हूंकारबीजसम्पन्ना हूंकारोत्तारणाम्बिका ।। ६६½ ।।

க்ரீம்காரவ்ருத்தபத்மாஷ்டதலபூபுரநிஷ்டிதா ।। 61 ।।
க்ரீம்காரஜாபபக்தௌகநித்யநிஸ்ஸீமஹர்ஷதா ।
க்ரீம்த்ரிபஞ்சாரசக்ரஸ்தா க்ரீம்கால்யுக்ராதிஸேவிதா ।। 62 ।।
க்ரீம்காரஜாபஹ்ருத்வ்யோமசந்த்ரிகா க்ரீம்கராலிகா ।
க்ரீம்காரப்ரஹ்மரந்த்ரஸ்தப்ரஹ்மஜ்ஞேயஸ்வரூபிணீ ।। 63 ।।
க்ரீம்ப்ராஹ்மீநாரஸிம்ஹ்யாதியோகின்யாவ்ருதஸுந்தரீ ।
க்ரீம்காரஸாதகௌந்நத்யஸாமோதஸித்திதாயினீ ।। 64 ।।
ஹூம்காரதாரா ஹூம்பீஜஜபதத்பரமோக்ஷதா ।
ஹூம்த்ரைவித்யதராம்நாயாந்வீக்ஷிக்யாதிப்ரதாயிகா ।। 65 ।।

ஹூம்வித்யாஸாதனுமாத்ரசதுர்வர்க்கபலப்ரதா ।
ஹூம்ஜாபகத்ரயஸ்த்ரிம்ஶத்கோடிதேவப்ரபூஜிதா ॥ 66 ॥

ஹூம்காரபீஜஸம்பன்னு ஹூம்காரோத்தாரணம்பிகா ॥ 66½ ॥

216. क्रींकारवृत्तपद्माष्टदलभूपुरनिष्ठिता—க்ரீம்காரவ்ருத்தபத்மாஷ்டதலபூபுர-நிஷ்டிதா—

க்ரீம்காரத்தின் ஸ்போடமான காலீ சக்ரத்தின் பிந்துவிலும், கோணங்களிலும் மட்டுமல்லாது, வ்ருத்தம், அஷ்டதளம், பூபுரம், அந்தராலம் ஆகிய ஸ்தலங்களிலும் ஆங்காங்கு ப்ரதிஷ்டையாகி இருக்கும் பரிவார ஶக்தி தேவதா ஸ்வரூபமாகவே ஸாதகன் த்யானத்தில் ப்ரத்யக்ஷமாக விளங்குபவள்.

குறிப்பு:—ஸஹஸ்ரநாமம் 572 ஆவது நாமம், உபநிஷத் 2 ஆவது அநுவாகம், ஸஹஸ்ரநாம பலச்ருதி—முதற்பாகம் பக்கம் 463; 464; 465 பார்க்க.

217. क्रींकारजापभक्तौघनित्यनिस्सीमहर्षदा—க்ரீம்காரஜாபபக்தௌகநித்யநிஸ்ஸீம-ஹர்ஷதா—

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் உபாஸகர் குழாங்களுக்கு நிரந்தரமான, எல்லையற்ற ஆனந்தமும் மோக்ஷ ஸாம்ராஜ்யமும் அநுக்ரஹித்தருளும் அவ்யாஜ கருணைமூர்த்தி.

218. क्रींत्रिपञ्चारचक्रस्था—க்ரீம்த்ரிபஞ்சாரசக்ரஸ்தா—

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாகப் பெருகியதும், மத்தியில் பிந்துவிற்கு அடுத்தபடி பதினைந்து கோண அமைப்புக் கொண்டுள்ளதும் ஆன காலீ சக்ரத்தில் அசிந்த்ய ஶக்தி கதியுடன் விளங்குபவள்.[1]

219. क्रींकाल्युग्रादिसेविता—க்ரீம்கால்யுக்ராதிஸேவிதா—

காலீ சக்ரத்தில் பிந்துவைச் சுற்றிலும் ஆங்காங்கு ப்ரதிஷ்டையாகியிருக்கும் காலீ, கபாலினீ, உக்ரா, உக்ரப்ரபா முதலிய பரிவாரஶக்தி தேவதைகளால் க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை. ப்ரயோகித்து ஆராதிக்கப்படும் மந்த்ர மூர்த்தி.

---

[1] त्रिपञ्चारे पीठे शवशिवहृदि स्मेरवदनां महाकालेनोच्चैर्मदनरसलावण्यनिरताम् ।
समासक्तो नक्तं स्वयमपि रतानन्दनिरतो जनो यो ध्यायेत्त्वामयि जननि स स्यात्स्मरहरः॥

—கர்ப்பூர ஸ்தோத்திரம் - 18

220. क्लींकारजापहृद्व्योमचन्द्रिका — க்ரீம்காரஜாபஹ்ருத்வ்யோமசந்த்ரிகா —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரேமையுடன் ஜபிக்கும் யோகினிகளின் ஹ்ருதயாகாசத்தில் குளிர்ச்சியான ஜ்யோதிஸ்ஸுடன் ப்ரகாசிக்கும் சந்த்ரனின் நிலவொளிபோல் ஜ்வலித்தருளும் ஜ்யோதிஷ்ப்ரகாச மூர்த்தி.

221. क्लींकरालिका — க்ரீம்காரலிகா —

தீய ஒழுக்கமுள்ளவர்களை க்ரீம்காரத்தின் ஒலி மூலம் தண்டித்து அவர்களை நல்வழிப்படுத்தி அருளும் தர்ம மூர்த்தி.

222. क्लींकारब्रह्मरन्ध्रस्थब्रह्मज्ञेयस्वरूपिणी — க்ரீம்காரப்ரஹ்மரந்த்ரஸ்தப்ரஹ்மஜ்ஞேயஸ்வரூபிணீ —

க்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஜபத்தினூடே ஸஹஸ்ராரமத்தியில் த்வாதசதள கமல மத்தியில் குரு ஸ்வரூபிணியாக வீற்றிருப்பவளாகத் தியானிப்பதன் மூலம் ஒருவாறு உணரத்தக்கவள்.

223. क्लींब्राह्मीनारसिंह्यादियोगिन्यावृतसुन्दरी — க்ரீம்ப்ராஹ்மீநாரஸிம்ஹ்யாதியோகின்யாவ்ருதஸுந்தரீ —

காலீ சக்ரத்தில் அஷ்டதளங்களில் ப்ரதிஷ்டையாகி இருக்கும் ப்ராஹ்மீ, நாராயணீ, நாரஸிம்ஹீ முதலிய எல்லா பரிவாரசக்தி தேவதைகளாலும் வித்யாராஜ்ஞியை ப்ரயோகித்து ஆராதிக்கப்படும் பேரழகி.

224. क्लींकारसाधकौन्नत्यसामोदसिद्धिदायिनी — க்ரீம்காரஸாதகௌந்நத்யஸாமோதஸித்திதாயினீ —

வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு மஹோந்நத பதவியையும் மந்த்ர ஸித்தியையும் நிலைத்த ஆனந்தத்தையும் அருளும் ப்ரஹ்மானந்த ஸ்வரூபிணீ.

225. हूंकारतारा — ஹூம்காரதாரா —

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களின் த்யானத்தில் தாரா தேவியாகவும் ஸாந்நித்தியம் கொள்ளும் விஸ்வரூபிணீ.

226. हूंबीजजपतत्परमोक्षदा — ஹூம்பீஜஜபதத்பரமோக்ஷதா —

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு மோக்ஷ ஸாம்ராஜ்யம் அருளும் அபார கருணாமூர்த்தி.

227. हूं त्रैविद्यधराम्नायान्वीक्षिक्यादिप्रदायिका — ஹூம்த்ரைவித்யதராம்ஞயாந்வீக்ஷிக்யாதிப்ரதாயிகா—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு வேதவேதாந்த ஸ்ம்ருதி ஶாஸ்த்ர விமர்ஶஜ்ஞானம் அருளும் வித்யாவிநோதினீ.[1]

---

1. ருக், யஜுஸ், ஸாமன் ஆகிய மூன்று வேதங்களின் கூட்டு "த்ரைவித்யம்" எனப்படும்.

त्रैविद्य—वेदत्रयाभिज्ञे ॥ —வாசஸ்பத்யம்—3395.

राजा कृत्वा पुरे स्थानं ब्राह्मणान् न्यस्य तत्र तु ।
त्रैविद्यं वृत्तिमद्ब्रूयात् स्वधर्म्मः पाल्यतामिति ॥

—யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி.

तिसृणां विद्यानां समाहारः त्रिविद्यम् । त्रिविद्यमेव त्रैविद्यम् । स्वार्थे अण् ॥

—வாசஸ்பத்யம்-3395.

ऋचो यजूंषि सामानि त्रैविद्यं तत्र तिष्ठति । . . . . . . ॥
स्वाध्यायेन व्रतैर्होमैस्त्रैविद्येनेज्यया सुतैः । महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः ॥

—மநுஸ்ம்ருதி.

"ஆம்ஞயம்" எனபது ப்ராசீன காலத்திலிருந்து தொடர்ந்து வரும் ஸம்ப்ரதாயமான படிப்பு; —அதாவது ஆழமான ஆராய்ச்சி விமர்ஶங்களுடன் தொடர்ச்சியாகச் செய்யும் ஸாங்கோபாங்கமான வேதப்படிப்பு:

आम्नायवचनं सत्यमित्ययं लोकसङ्ग्रहः । आम्नायेभ्यः पुनर्वेदाः प्रसृतास्सर्वतोमुखाः ॥

—மஹாபாரதம் - ஶாந்தி பர்வம் - அத் -261.

"ஆந்விக்ஷிகீ" என்பது ந்யாய ஶாஸ்த்ர விதிமுறைகளை யநுஸரித்துச் செய்யப்படும் ஆத்ம லக்ஷண விமர்ஶ க்ரமம்; அதாவது, ஆத்ம வித்யை. இந்த ஶாஸ்த்ரம் கௌதம மஹர்ஷியினால் கல்பிக்கப்பட்டு நிறுவப்பட்டது: அக்ஷபாதரால் இயற்றப்பட்ட "பஞ்சாத்யாயீ" என்ற நூல் இந்த ஶாஸ்த்ரத்தை விரிவாக விளக்குகிறது: மேலும், ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா பகவத்கீதையில், விபூதியோகாத்யாயத்தில், உலகத்திலுள்ள எல்லா வித்யைகளுள் தாம் அத்யாத்ம வித்யா ஸ்வரூபியாக விளங்குவதாகக் கூறுகிறார்:

आन्वीक्षिकी—श्रवणादनु ईक्षा पर्य्यालोचना । सा प्रयोजनमस्याः । ठञ् । तर्कविद्यायाम् । गौतमप्रणीतायाम् आत्मविद्यायाम् । तत्प्रतिपादकग्रन्थश्च अक्षपादेन पञ्चाध्यायी रचितः ॥

—வாசஸ்பத்யம்-734.

आन्वीक्षिकी दण्डनीतिस्तर्कविद्यार्थशास्त्रयोः ॥ —அமரகோஶம்-320

अध्यात्मविद्या विद्यानाम् ॥ —பகவத்கீதை-X-32.

228. **हूंविद्यासाधनमात्रचतुर्वर्गफलप्रदा—ஹூம்வித்$_3$யாஸாத$_4$னமாத்ரசதுர்வர்க்க$_3$-ப$_2$லப்ரதா$_3$—**

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு சதுர்வித புருஷார்த்தங்களையும் அவ்யாஜமாக அருளும் கருணைமூர்த்தி.

229. **हूंजापकत्रयस्त्रिंशत्कोटिदेवप्रपूजिता—ஹூம்ஜாபகத்ரயஸ்த்ரிம்ஶத்கோடிதே$_3$வ-ப்ரபூஜிதா—**

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியைப் பிரேமையாக ஜபித்து உபாஸிக்கும் முப்பத்து முக்கோடி தேவர்களாலும் விதிப்படி ஆராதிக்கப்படும் விஶ்வமூர்த்தி.

230. **हूंकारबीजसम्पन्ना—ஹூம்காரபீ$_3$ஜஸம்பன்னா—**

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ மந்த்ரமே வடிவானவள்.

231. **हूंकारोत्तारणाम्बिका—ஹூம்காரோத்தாரணாம்பி$_3$கா—**

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களை ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவித்து மோக்ஷ ஸாம்ராஜ்யம் அளித்துக் கரையேற்றும் ஜகன்மாதா.

हूंफट्कारसुधामूर्त्तिर्हूंफट्स्वाहास्वरूपिणी ॥ ६७ ॥
हूंकारबीजगूढात्मविज्ञानवैभवाम्बिका ।
हूंकारश्रुतिशीर्षोक्तवेदान्ततत्त्वरूपिणी ॥ ६८ ॥
हूंकारबिन्दुनादान्तचन्द्रार्द्धव्यापिकोन्मनी ।
हूंकाराज्ञासहस्रारजाग्रत्स्वप्नसुषुप्तिगा ॥ ६९ ॥
हूंप्राग्दक्षिणपाश्चात्योत्तरान्वयचतुष्कगा ।
हूंवह्निसूर्य्यसोमाख्यकुण्डलिन्यात्तशक्तिका ॥ ७० ॥
हूंकारेच्छाक्रियाज्ञानशक्तित्रितयरूपिणी ।
हूंरसास्थिवसामांसासृङ्मज्जाशुक्रनिष्ठिता ॥ ७१ ॥
हूंकारघननीलांशुमेघनादानुलासिनी ।
हूंकारजपसानन्दपुरश्चरणकामदा ॥ ७२ ॥

हूंकारकलनाकालनैर्गुण्यनिष्क्रियात्मिका ।। ७२½ ।।

ஹூம்பட்காரஸுதாமூர்த்திர் ஹூம்பட்ஸ்வாஹாஸ்வரூபிணீ ।। 67 ।।

ஹூம்காரபீஜகூடாத்மவிஜ்ஞானவைபவாம்பிகா ।
ஹூம்காரஶ்ருதிஶீர்ஷோக்தவேதாந்ததத்த்வரூபிணீ ।। 68 ।।

ஹூம்காரபிந்துநாதாந்தசந்த்ரார்த்தவ்யாபிகோன்மனீ ।
ஹூம்காராஜ்ஞாஸஹஸ்ராரஜாக்ரத்ஸ்வப்னஸுஷுப்திகா ।। 69 ।।

ஹூம்ப்ராக்தக்ஷிணபாஶ்சாத்யோத்தராந்வயசதுஷ்ககா ।
ஹூம்வஹ்னிஸௌர்ய்யஸோமாக்யகுண்டலின்யாத்தஶக்திகா ।। 70 ।।

ஹூம்காரேச்சாக்ரியாஜ்ஞானஶக்தித்ரிதயரூபிணீ ।
ஹூம்ரஸாஸ்திவஸாமாம்ஸாஸ்ருங்மஜ்ஜாஶுக்ரநிஷ்டிதா ।। 71 ।।

ஹூம்காரவனநீலாம்புமேகநாதாநுலாஸினீ ।
ஹூம்காரஜபஸானந்தபுரஶ்சரணகாமதா ।। 72 ।।

ஹூம்காரகலனாகாலனைர்க்குண்யநிஷ்க்ரியாத்மிகா ।। 72½ ।।

### 232. हूंफट्कारसुधामूर्त्तिः— ஹூம்பட்காரஸுதாமூர்த்தி:—

''ஹூம்பட்'' என்ற மந்த்ரத்தை ப்ரேமையுடன் ஜபிப்பவர்களுக்கு ஆனந்தமாகிய அம்ருதத்தை வாரி வழங்கி மகிழும் அன்பு வடிவினள்.

### 233. हूंफट्स्वाहास्वरूपिणी— ஹூம்பட்ஸ்வாஹாஸ்வரூபிணீ—

''ஹூம்பட்ஸ்வாஹா'' என்ற மஹா மந்த்ர வடிவினளாதலால் அதனை ப்ரேமையுடன் ஜபித்து உபாஸிப்பவர்களின் ஹ்ருதயத்தில் தன் பூர்ண ஸ்வரூபத்துடன் நித்ய வாஸம் செய்து மகிழ்பவள்.

### 234. हूंकारबीजगूढात्मविज्ञानवैभवाम्बिका— ஹூம்காரபீஜகூடாத்மவிஜ்ஞானவைபவாம்பிகா—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு பரமரஹஸ்யமான ஆத்மஸ்வரூபத்தை உணர்த்தும் ப்ரஹ்மஜ்ஞானமாகிய வைபவத்தை அருளும் ஜகன்மாதா.

235. ह्रूंकारश्रुतिशीर्षोक्तवेदान्ततत्त्वरूपिणी—ஹூம்காரஶ்ருதிஶீர்ஷோக்தவேதா-ந்த தத்த்வரூபிணீ—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு வேதவேதாந்த விமர்ஶஜ்ஞானம் அளித்து அவர்கள் புத்தியில் ப்ரஹ்ம வித்யாதத்துவ விவேக ஜ்யோதி ரூபிணியாக ஆவிர்ப்பவித்து அருளும் ஜ்ஞானப்ரஸூனாம்பிகை.

236. ह्रूंकारबिन्दुनादान्तचन्द्रार्द्धव्यापिकोन्मनी—ஹூம்காரபிந்துநாதாந்தசந்த்ரார்த்த-வ்யாபிகோன்மனீ—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் மலர்ச்சியாக உபாஸகனின் ஆஜ்ஞைக்கும் ஸஹஸ்ராரத்துக்கும் இடையிலுள்ள ஒன்பது சிதாகாஶ ஸ்தானங்-களாகிய பிந்து, அர்த்தசந்த்ரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், ஶக்தி, வ்யாபிகா, ஸமனா, உன்மனீ ஆகிய ஸ்தலங்களினூடே உபாஸகனை மேன்மேலும் உயர்த்தி கடைசியில் அவாங்மானஸ கோசரமான உன்மனீ ஸ்தானத்தை எளிதில் அடைவித்து அருளும் பரமகருணாமூர்த்தி.

237. ह्रूंकाराज्ञासहस्रारजाग्रत्स्वप्नसुषुप्तिगा—ஹூம்காராஜ்ஞாஸஹஸ்ராரஜாக்ரத்-ஸ்வப்னஸுஷுப்திகா—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகனைச் சிதாகாஶ ஸ்தானங்-களினூடே மேன்மேல் உயர்த்தி அவனுடைய ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி அவஸ்தைகளைத் தூய்மையாக்கி அடுத்து துரீய, துரீயாதீத, அவஸ்தைகள் மூலம் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைவித்து அருளும் யோகமூர்த்தி.

238. ह्रूंप्राग्दक्षिणपाश्चात्योत्तरान्वयचतुष्कगा—ஹூம்ப்ராக்தக்ஷிணபாஶ்சாத்யோத்-தராந்வயசதுஷ்ககா—

கிழக்கேயும், மேற்கேயும், தெற்கேயும், வடக்கேயும், அந்தரத்திலும் அமர்ந்-துள்ள தேவதைகளின் வர்க்க பரம்பரைகளில் ஊடாடிக்கொண்டு ஹூம்கார ஒலி மூலம் இந்த ப்ரபஞ்சத்தை அநுக்ரஹித்துக்கொண்டு இருப்பவளான விஶ்வ-வ்யாபினீ மூர்த்தி.

239. ह्रूंवह्निसूर्यसोमाख्यकुण्डलिन्यात्तशक्तिका—ஹூம்வஹ்னிஸூர்யஸோமாக்ய-குண்டலின்யாத்தஶக்திகா—

கூர்ச்ச பீஜ ஜப வீர்யத்தால் இடா, பிங்கலா, ஸுஷும்ணா நாடிகளான சந்த்ரன், ஸூர்யன், அக்னி ஆகிய முச்சுடர்களில் தன் வித்யுத் ஶக்தியை ப்ரஸரிக்-கச் செய்து உபாஸகனை உய்வித்து அருளும் பரம கருணாமூர்த்தி.

240. हूंकारेच्छाक्रियाज्ञानशक्तित्रितयरूपिणी— ஹூம்காரேச்சாக்ரியாஜ்ஞானஶக்தி-த்ரிதயரூபிணீ—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாரஜ்ஞீ உபாஸகர்களுக்கு, இச்சா, க்ரியா, ஜ்ஞானம் ஆகிய முச்சக்திகளின் கதியைத் தன் இடது கண், வலது கண், நெற்றிக் கண், ஆகிய மூன்று கண்களின் கடாக்ஷத்தால் வீர்யமாக இயங்கச் செய்து அவர்களது ஆணவம், மாயா, கர்மம் ஆகிய மும்மலங்களை நீக்கி பூர்ண ப்ரஹ்ம ஜ்ஞானம் ஸித்திக்க அருளும் கருணா கடாக்ஷ மூர்த்தி.

241. हूंरसास्थिवसामांसासृङ्मज्जाशुक्रनिष्ठता—ஹூம்ரஸாஸ்திவஸாமாம்ஸா-ஸ்ருங்மஜ்ஜாஶுக்ரநிஷ்டிதா—

ஹூம்காரத்தின் ஒலி ஓட்டத்தின் மூலம் ஜீவர்களின் உடல்களில் அமைந்துள்ள அன்னரஸம், எலும்பு, கொழுப்பு ஊன், ரக்தம், எலும்புரஸம், இனப் பெருக்கு ரஸம் ஆகிய ஸப்த தாதுக்களிலும் தானே ஸாந்நித்தியமாக இருந்து கொண்டு அவற்றின் இயக்கத்துக்கு வீர்யம் அருளும் ஜகன்மாதா.

242. हूंकारवननीलांशुमेघनादानुलासिनी—ஹூம்காரவனநீலாம்ஶுமேகநாதானு-லாஸினீ—

ஹூம்காரமாகிய வனத்தில் ஆடி மகிழும் மயில் போல் கரிய சாயல் படைத்த பேரழகி.

243. हूंकारजपसानन्दपुरश्चरणकामदा—ஹூம்காரஜபஸானந்தபுரஶ்சரணகாமதா-

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களின் பூஜையில் ப்ரத்யக்ஷமாகி வரம் அருள்பவளான அபார கருணா ஜலதி.

244. हूंकारकलनाकालनैर्गुण्यनिष्क्रियात्मिका—ஹூம்காரகலனாகாலநைர்க்குண்ய-நிஷ்க்ரியாத்மிகா—

ஹூம்காரத்தின் ஶக்தியால் ஐந்தொழில் நடத்தினாலும் அதில் தான் நேரடியாக ஒட்டாததால் நிர்க்குணப்ரஹ்ம ஸ்வரூபிணீ.

हूंकारब्रह्मविद्यादिगुरूत्तमस्वरूपिणी ॥ ७३ ॥
हूंकारस्फोटनानन्दशब्दब्रह्मस्वरूपिणी ।
हूंकारशाक्ततन्त्रादिपरमेष्ठिगुरूत्तमा ॥ ७४ ॥
हूंकारवेदमन्त्रोक्तमहाविद्याप्रबोधिनी ।
हूंकारस्थूलसूक्ष्मात्मपरब्रह्मस्वरूपिणी ॥ ७५ ॥

हूंकारनिर्गुणब्रह्मचित्स्वरूपप्रकाशिका ।
हूंनिर्विकारकालात्मा हूंशुद्धसत्त्वभूमिका ॥ ७६ ॥
ह्रीमष्टभैरवाराध्या ह्रींबीजादिमनुप्रिया ।
ह्रींजयाद्यङ्कपीठाख्यशक्त्याराध्यपदाम्बुजा ॥ ७७ ॥
ह्रींमहत्सिंहधूम्रादिभैरव्यर्चितपादुका ।
ह्रींजपाकरवीरार्कपुष्पहोमार्चनप्रिया ॥ ७८ ॥
ह्रींकारनैगमाकारा ह्रींसर्वदेवरूपिणी ॥ ७८½

ஹூம்கார ப்ரஹ்மவித்யாதிகுருத்தமஸ்வரூபிணீ ॥ 73 ॥
ஹூம்காரஸ்போடனந்தஶப்தப்ரஹ்மஸ்வரூபிணீ ।
ஹூம்காரஶாக்ததந்த்ராதிபரமேஷ்டிகுருத்தமா ॥ 74 ॥
ஹூம்காரவேதமந்த்ரோக்தமஹாவித்யாப்ரபோதினீ ।
ஹூம்காரஸ்தூலஸூக்ஷ்மாத்மபரப்ரஹ்மஸ்வரூபிணீ ॥ 75 ॥
ஹூம்காரநிர்குணப்ரஹ்மசித்ஸ்வரூபப்ரகாஶிகா ।
ஹூம்நிர்விகாரகாலாத்மா ஹூம்ஶுத்தஸத்த்வபூமிகா ॥ 76 ॥
ஹ்ரீமஷ்டபைரவாராத்யா ஹ்ரீம்பீஜாதிமநுப்ரியா ।
ஹ்ரீம்ஜயாத்யங்கபீடாக்யஶக்த்யாராத்யபதாம்புஜா ॥ 77 ॥
ஹ்ரீம்மஹத்ஸிம்ஹதூம்ராதிபைரவ்யர்ச்சிதபாதுகா ।
ஹ்ரீம்ஜபாகரவீரார்க்கபுஷ்பஹோமார்ச்சனப்ரியா ॥ 78 ॥
ஹ்ரீம்காரநைகமாகாரா ஹ்ரீம்ஸர்வதேவரூபிணீ ॥ 78½ ॥

245. **हूंकारब्रह्मविद्यादिगुरूत्तमस्वरूपिणी— ஹூம்காரப்ரஹ்மவித்யாதிகுருத்தம-ஸ்வரூபிணீ—**

ஹூம்காரத்தின் ஒலி ஓட்டமூலம், வித்யார்த்திகளாகிய வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு அத்யாத்ம வித்யை—அதாவது, ப்ரஹ்மத்தின் ஶுத்த சைதன்ய ஸ்வரூப லக்ஷணம்—முதலிய எல்லா வித்யைகளையும் போதிக்கும் உத்தம குரு வடி-

வினாாக ஆவிர்ப்பவித்து, அவர்கள் அப்யஸிக்கத் தலைப்படும் எல்லா வித்யைகளும் சீக்கிரமே அவர்களுக்குப் பூர்ணமாக ஸித்திக்க அருளும் கருணா மூர்த்தி.

246. हूंकारस्फोटनानन्दशब्दब्रह्मस्वरूपिणी — ஹூம்காரஸ்போடனானந்தஶப்தப்ரஹ்ம-ஸ்வரூபிணீ —

ஹூம்காரத்தின் ஒலி ஒட்டமூலம், சொல்லின் த்வனி, அதன் பொருள், அவற்றின் ஸம்பந்தம்-இவற்றின் உணர்ச்சியிலுள்ள ஆனந்தம், இவற்றை எல்லாம் ஜிஜ்ஞாஸுவிற்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவாக உணர்த்தி அருளும் ஜ்ஞான ரூபிணீ.

247. हूंकारशाक्ततन्त्रादिपरमेष्ठिगुरूत्तमा — ஹூம்காரஶாக்ததந்த்ராதிபரமேஷ்டி-குருத்தமா —

ஹூம்காரத்தின் ஒலி ஓட்டமூலம் ஶாக்தம் முதலிய புரஶ்சரண தந்த்ரங்களை உபாஸகர்களுக்கு போதிக்கும் குருத்தம ஸ்வரூபிணீ.*

248. हूंकारवेदमन्त्रोक्तमहाविद्याप्रबोधिनी — ஹூம்காரவேதமந்த்ரோக்தமஹாவித்யா-ப்ரபோதினீ —

ஹூம்காரத்தின் ஒலி ஓட்டமூலம் வேதங்களினின்று உருவான தஶமஹா-வித்யைகளைப் போதிக்கும் குருஸ்வரூபிணீ.

---

* உலகத்தில் நடைமுறையிலுள்ள உபாஸன ஆசரண மார்க்கங்களுள் ஶாக்த உபாஸனமே மஹோத்கதமானது என்று பல தந்த்ரங்கள் கூறுகின்றன: உதாரணமாக முண்டமாலா தந்த்ரமானது எல்லா உலகங்களிலும், குறிப்பாக ஸ்வர்க்கம், பூலோகம், பாதாலம் ஆகிய லோகங்களில் ஶாக்தத்துக்கு மேலான அல்லது ஈடான உபாஸன மார்க்கமே கிடையாது என்றும், ஶாக்தமே ஶைவத்துக்-கும் மேலானது என்றும் அறுதியிட்டுக் கூறுகிறது:

स्वर्गे मर्त्ये च पाताले नास्ति शाक्तात्पर: प्रिय: ।
सौराणां गणपत्यानां वैष्णवानां तथैव च ।।
शैवान्ते चैव शाक्तश्च क्रमश: क्रमश: प्रिये ।।

—முண்டமாலாதந்த்ரம்—2-ஆவது படலம்.

அங்ஙனமே, ஶாக்த ஆராதனம் செய்த பிறகு, எந்த ஓர் உபாஸகனும் வேறு எந்த உபாஸனமும் செய்வது குற்றமாகும் என்று கந்தர்வ தந்த்ரம் எச்சரிக்கை செய்கிறது:

अस्याश्चाराधनं कृत्वा नान्यस्याराधनं चरेत् । अन्यस्य स्मरणाद्देवि योगिनीशापमालभेत् ।।

—கந்தர்வ தந்த்ரம்

249. ह्रूंकारस्थूलसूक्ष्मात्मपरब्रह्मस्वरूपिणी—ஹூம்காரஸ்தூ[2]லஸூக்ஷ்மாத்ம-பரப்ரஹ்[3]மஸ்வரூபிணீ—

ஹூம்காரத்தின் ஒலி ஓட்டமூலம் உபாஸகனுடைய ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், ஆகிய மூன்று சரீரங்களும் யோகம் மூலமாக பரப்ரஹ்மத்தில் லயிக்கச் செய்து, அதன் வாயிலாக அவன் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைந்து ஜீவன் முக்தி அடைய அருள்பவள்.

250. ह्रूंकारनिर्गुणब्रह्मचित्स्वरूपप्रकाशिका—ஹூம்காரநிர்[3]க்[3]குணப்[3]ரஹ்மசித்-ஸ்வரூபப்ரகாஶிகா—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களின் புத்தியில் சிதக்னியின் ப்ரேரணத்தால் ஆத்மஜ்ஞானச் சுடர் ஜ்வலிக்கச் செய்து அவர்களை ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைவிக்கும் நிர்க்குண ப்ரஹ்ம ஸ்வரூபிணீ; அதாவது, தான் இயல்பாக நிர்க்குணமாயினும், முமுக்ஷுவான ப்ரேமோபாஸகன் மீது தானாகவே கருணை சுரந்து மேலிட்டு அவன் நிர்லிப்தமான துரீய நிலை அடைந்து ஜீவன் முக்தனாக அருளும் கருணா மூர்த்தி.

251. ह्रूंनिर्विकारकालात्मा — ஹூம்நிர்விகாரகாலாத்மா—

ஹூம்காரத்தின் ஒலி ஓட்டத்தால் ப்ரபஞ்சத்தின் கல்ப ப்ரலயங்களைத் தன் வித்யுத் ஶக்தியின் மூலம் இயக்கி அருளினாலும், அந்நிகழ்ச்சிகளால் தன் இயல்பான நிர்க்குணமான நிலையில் யாதொரு மாறுபாடும் ஏற்படாதவளான கால ஶக்தி மூர்த்தி.*

---

* प्रकृते: अन्यथाभाव: विकार: । स निर्गतो यस्मात् ।।

निर्विकार–जन्मादिषड्भावविकारहीने परमात्मनि ।। —வாசஸ்பத்யம் - 4103.

त्वयेह भवने मह्यं वस्तव्यं निर्विकारया ।। ஹரிவம்ஶம் - 9-வது அத்.

सिद्ध्यसिद्ध्योर्निर्विकार: कर्ता सात्त्विक उच्यते ।।—பகவத்கீதை - XVIII - 26.

இந்த சராசர ப்ரபஞ்சமும் இதன் கர்த்தாவாகிய பரமேஶ்வரனும்-யாவுமே காலாத்மஸ்வரூபந்தான் என்று மஹாபாரதம் அறுதியிட்டுக் கூறுகின்றது:

कालात्मन् - काल: आत्मा अस्य इति ।। कालात्मन् - कालस्वरूपे परमेश्वरे ।।

வாசஸ்பத்யம் - 2007.

कालात्मा कालकृद्विभु: ।। ஸூர்ய்ய ஸித்தாந்தம்.

कालेन तत्कृत आत्मा स्वरूपं यस्य स: ।। ...कालकृतस्वभावके स्थावरजङ्गमादौ ।।

सात्त्विका राजसाश्चैव तामसा ये च केचन । भावा: कालात्मकास्सर्वे प्रवर्त्तन्ते हि जन्तुषु ।।

जङ्गमास्स्थावराश्चैव च दिवि वा यदि वा भुवि । सर्वे कालात्मकास्सर्वं कालात्मकमिदं जगत् ।।

प्रवृत्तयश्च लोकेऽस्मिंस्तथैव च निवृत्तय: । तासां विकृततायाश्च सर्वं कालात्मकं स्मृतम् ।।

—மஹாபாரதம் - ஆநுஶாஸனிக பர்வம் - முதல் அத்.

252. हूंशुद्धसत्त्वभूमिका—ஹூம்ஶுத்தஸத்த்வபூமிகா—

ஹூம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ ஸாதகர்களுக்கு ரஜஸ், தமஸ், கலப்படமில்லாத ஶுத்த ஸத்த்வ நிலை ஸித்திக்க அருள்பவள்.

253. ह्रीमष्टभैरवाराध्या—ஹ்ரீமஷ்டபைரவாராத்யா—

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாக ஆவிர்ப்பவித்து காலீ சக்ரத்தின் பூபுரத்தின் எட்டு திக்குகளிலும் ப்ரதிஷ்டை ஆகி உள்ள. கால, மஹா, ஸிம்ஹ, தூம்ர, பீம, உன்மத்த, வஶீகரண, மோஹன, ஆகிய எட்டு பைரவர்களால் அவரவர்களுடைய ஶக்திகளாகிய பைரவிகளுடன் விதிமுறைப்படி ஆராதிக்கப்படுபவளான பராஶக்தி மூர்த்தி.

254. ह्रींबीजादिमनुप्रिया—ஹ்ரீம்பீஜாதிமநுப்ரியா—

இதர பீஜங்களிடையே ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் உபாஸகர்களை அளவுகடந்த வாத்ஸல்யத்துடன் அநுக்ரஹிப்பவளான கருணாமூர்த்தி.

மேலும், ஹ்ரீம்காரம் ஸம்புடமான பிண்ட, கர்த்தரீ, பீஜ, மந்த்ர, மாலா ஆகிய ஐவகை மந்த்ரங்களை உபாஸிக்கும் ஸாதகர்களிடம் அத்யந்த ப்ரீதி கொண்ட மந்த்ர மூர்த்தி.

குறிப்பு:—த்ரிசதி நாமம் 265 பார்க்க.

255. ह्रींजयाद्यङ्कपीठाख्यशक्त्याराध्यपदाम्बुजा—ஹ்ரீம்ஜயாத்யங்கபீடாக்யஶக்த்யாராத்யபதாம்புஜா—

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாகப் பெருகிய காலீ சக்ரத்தின் பீட ஶக்திகளாகிய ஜயா, விஜயா, அஜிதா, அபராஜிதா, நித்யா, விலாஸினீ, தோக்த்ரீ, அகோரா, மங்கலா ஆகிய ஒன்பது தேவிகளால் விதிப்படி ஆராதிக்கப்படுபவள்.*

---

*காலீசக்ர மேருவைப் பரிக்கும் கூர்ம்ம பீடத்தின் அதிபதிகள் ஒன்பதின்மர். அவர்கள் பீடத்தின் எட்டு திக்கு முனைகளிலும் மத்தியிலுமாக, தம் தம் ஶக்தி தேவதைகளுடன் ப்ரதிஷ்டையாகி சக்ர-மேருவைத் தாங்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள், முறையே:—1) ஆதிகூர்ம்மர் 2) அனந்தர் 3) ஶக்திகந்தர் 4) ஆதிமூலர் 5) ஊர்ஜ்ஜஸ்வலர் 6) அசலகீலர் 7) வீர்ய்யநாலர் 8) பத்ரபத்திரர் 9) யோகபீடர். அவர்களுடைய ஶக்தி தேவதைகள், முறையே:—1) ஜயா 2) விஜயா 3) அஜிதா 4) அபராஜிதா 5) நித்தியா 6) விலாஸினீ 7) தோக்த்ரீ 8) அகோரா 9) மங்கலா.

256. ह्रींमहत्सिंहधूम्रादिभैरवार्चितपादुका — ஹ்ரீம்மஹத்ஸிம்ஹ தூ$_4$ம்ராதி$_3$பை$_4$ரவ்யர்-ச்சிதபாது$_3$கா —

253வது நாமத்தில் கூறிய எட்டு பைரவர்களின் ஶக்திகளாக, அவரவர்களுடன் கூடவே ஆவிர்ப்பவித்த எட்டு பைரவிகளால் அவர்களுடைய பர்த்தாக்களுடன், திவ்ய தம்பதிகளான காலி - கால தன்மயத்வ பாவனையில் விதிப்படி ஆராதிக்கப்படுபவள்.

257. ह्रींजपाकरवीरार्कपुष्पहोमार्चनप्रिया — ஹ்ரீம்ஜபாகரவீரார்க்கபுஷ்பஹோமார்ச்-சனப்ரியா —

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரயோகித்து செம்பருத்தி, அலரி, எருக்கு, ஆகிய புஷ்பங்களும் இதர விஶேஷமான ஹோம த்ரவ்யங்களும் கொண்டு முறைப்படி செய்யப்படும் ஹோமங்களிலும், அர்ச்சனைகளிலும் பெரிதும் மகிழ்பவளான மஹாவித்யா மூர்த்தி.

258. ह्रींकारनैगमाकारा — ஹ்ரீம்காரநைக$_3$மாகாரா —

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாக மலர்ந்த வேதங்கள், ஸ்ம்ருதிகள் புராண இதிஹாஸங்கள் முதலியவற்றில் நிர்த்தேசிக்கப்பட்டபடி முறைப்படி செய்யப்படும் பூஜை, ஹோமம், தர்ப்பணம் முதலிய க்ரமங்களில் ப்ரத்யக்ஷமாகி அருள்பவளான ஸர்வாம்நாய மூர்த்தி.

259. ह्रींसर्वदेवरूपिणी — ஹ்ரீம்ஸர்வதே$_3$வரூபிணீ —

ஹ்ரீம்காரத்தின் ஸ்போடமாக ஆவிர்ப்பவித்த கணபதி முதலான எல்லா தேவதைகளிலும் தானே ஸாந்நித்தியமாகி நிற்பவள்.

ह्रींकूर्च्चकालिकाकूटवाक्प्रसिद्धिप्रदायिका ।। ७९ ।।
ह्रींकारबीजसम्पन्नविद्याराज्ञीसमाधिगा ।
ह्रींकारसच्चिदानन्दपरब्रह्मस्वरूपिणी ।। ८० ।।

---

आदिकूर्म्मो ह्यनन्तश्च शक्तिकन्दस्तृतीयकः । चतुर्थ आदिमूलाख्य ऊर्ज्जस्वलश्च पञ्चमः ।।
षष्ठो ह्यचलकीलाख्यो वीर्यनालश्च सप्तमः । अष्टमो भद्रपत्राख्यो नवमो योगपीठकः ।।
नवैते कूर्म्मपीठाधिनायकाश्शक्तिसंयुताः । जया च विजया चैव ह्यजिता चापराजिता ।।
नित्या विलासिनी दोग्ध्री तथाघोरा च मङ्गला । आराध्याः कालिकाचक्रे पीठशक्त्यधिदेवताः ।।
—காலீதந்த்ரம்.

ह्रींहृल्लेखाख्यमन्त्रात्मा ह्रींकृष्णरक्तमानिनी ।
ह्रींपिण्डकर्त्तरीबीजमालादिमन्त्ररूपिणी ।। ८१ ।।
ह्रींनिर्वाणमयी ह्रींकारमहाकालमोहिनी ।
ह्रींमती ह्रींपराह्लादा ह्रीं ह्रींकारगुणावृता ।। ८२ ।।
ह्रींमादिसर्वमन्त्रस्था ह्रींकारज्वलितप्रभा ।
ह्रींकारोर्ज्जितपूजेष्टा ह्रींकारमातृकाम्बिका ।। ८३ ।।
ह्रींकारध्यानयोगेष्टा ह्रींकारमन्त्रवेगिनी ।
ह्रींमाद्यन्तविहीनस्वरूपिणी ह्रींपरात्परा ।। ८४ ।।
ह्रींभद्रात्मजरोचिष्णुहस्ताब्जवरवर्णिनी ।। ८४½ ।।

ஹ்ரீம்கூர்ச்சகாலிகாகூடவாக்ப்ரஸித்3தி4ப்ரதா3யிகா ।। 79 ।।
ஹ்ரீம்காரபீ3ஜஸம்பன்னவித்3யாராஜ்ஞீஸமாதி4கா3 ।
ஹ்ரீம்காரஸச்சிதா3னந்த3பரப்3ரஹ்மஸ்வரூபிணீ ।। 80 ।।
ஹ்ரீம்ஹ்ருல்லேகா2க்2யமந்த்ராத்மா ஹ்ரீம்க்ருஷ்ணரக்தமானினீ ।
ஹ்ரீம்பிண்ட3கர்த்தரீபீ3ஜமாலாதி3மந்த்ரரூபிணீ ।। 81 ।।
ஹ்ரீம்நிர்வாணமயீ ஹ்ரீம்காரமஹாகாலமோஹினீ ।
ஹ்ரீம்மதீ ஹ்ரீம்பராஹ்லாதா3 ஹ்ரீம் ஹ்ரீம்காரகு3ணாவ்ருதா ।। 82 ।।
ஹ்ரீமாதி3ஸர்வமந்த்ரஸ்தா2 ஹ்ரீம்காரஜ்வலிதப்ரபா4 ।
ஹ்ரீம்காரோர்ஜ்ஜிதபூஜேஷ்டா ஹ்ரீம்காரமாத்ருகாம்பி3கா ।। 83 ।।
ஹ்ரீம்காரத்4யானயோகே3ஷ்டா ஹ்ரீம்காரமந்த்ரவேகி3னீ ।
ஹ்ரீமாத்3யந்தவிஹீனஸ்வரூபிணீ ஹ்ரீம்பராத்பரா ।। 84 ।।
ஹ்ரீம்ப4த்3ராத்மஜரோசிஷ்ணுஹஸ்தாப்3ஜவரவர்ணினீ ।। 84½ ।।

260. **ह्रींकूर्चकालिकाकूटवाक्प्रसिद्धिप्रदायिका—ஹ்ரீம்கூர்ச்சகாலிகாகூடவாக்-ப்ரஸித்3தி4ப்ரதா3யிகா—**

ஹ்ரீம்காரம் ஸம்புடமான காலீத்ரிதாரியை ப்ரேமையுடன் ஜபிக்கும் உபாஸகர்களுக்கு தலைசிறந்ததான வாக்ப்ரபாவத்தை அருள்பவளான மஹாவாங்மய மூர்த்தி.[1]

**261. ह्रींकारबीजसम्पन्नविद्याराज्ञीसमाधिगा — ஹ்ரீம்காரபீஜஸம்பன்னவித்யாராஜ்ஞீ-ஸமாதிகா—**

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் உபாஸகர்களுக்கு எளிதில் ஸமாதிநிலை ஸித்திக்க அருளும் யோகேச்வரீ.

**262. ह्रींकारसच्चिदानन्दपरब्रह्मस्वरूपिणी — ஹ்ரீம்காரஸச்சிதானந்தபரப்ரஹ்மஸ்வ-ரூபிணீ —**

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு ஸச்சிதானந்த அநுபூதியும் பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமும் எளிதில் ஸித்திக்க அருளும் விராட் ஸ்வரூபிணீ.[2]

---

1. க்ரீம் (क्रीं) காரத்திற்கு "காலீ" (काली) அல்லது "காலிகா" (कालिका) என்றொரு சிறப்புப் பெயர். ஹூம் (हूं) காரத்திற்கு கூர்ச்சம் (कूर्चम्) என்றொரு சிறப்புப் பெயர். ஹ்ரீம் (ह्रीं) காரத்திற்கு "மாயா" (माया) என்றொரு சிறப்புப் பெயர். "க்ரீம் ஹூம் ஹ்ரீம்" (क्रीं हूं ह्रीं) என்ற இந்த மூன்று தாரைகளின் (பீஜங்களின்) கூட்டு தக்ஷிண காலியின் "த்ரிதாரீ" (त्रितारी) எனப்படும்.

कालीकूर्चसमायुक्तमायागूढोपदेशतः । प्रणवार्थप्रबोधिन्यौ नमामि गुरुपादुके ॥

—குருபாதுகாமஹாமந்த்ர பீடிகை.

குறிப்பு:—முதற்பாகம் பக்கம் 13; 14; 301 பார்க்க.

இங்கு "காலிகா கூடம்" (कालिकाकूटम्) என்றால் "காலீத்ரிதாரீ" (कालीत्रितारी) என்று பொருள்.

2. என்றும் நிலைத்து சாச்வதமாக இருப்பதும் (ஸத்), எல்லையற்ற பூர்ண ஜ்ஞானமே வடிவானதும் (சித்), கலப்படமற்ற ஆனந்தமயமானதும் (ஆனந்தம்) ஆன லக்ஷணம் படைத்தது பரப்ரஹ்மம். அதாவது ஸச்சிதானந்த ஸ்வரூபம். உபாஸகனுக்கு, தன் இஷ்ட தேவதையே இந்த லக்ஷணம் பூர்ணமாக அமைந்துள்ள வ்யக்தியாகும். ஆகையால், தக்ஷிணகாலிகையானவள், வித்யாராஜ்ஞியை அனன்யமாக உபாஸிக்கும் தன் ப்ரேமபக்தனை ஸச்சிதானந்த மூர்த்தியாகப் பரிண-மிக்கச் செய்து அருளும் அவ்யாஜ கருணாமூர்த்தி ஆவாள் என்பது தாத்பர்யம். தவிர, தேவி காலிகைக்கு ஸமர்ப்பிக்கப்படும் "சஷகம்" என்ற விசேஷ பானம் ஸச்சி-தானந்தத்தின் சின்னம்.

263. ह्रीं हृल्लेखाख्यमन्त्रात्मा — ஹ்ரீம்ஹ்ருல்லேகாக்யமந்த்ராத்மா —

ஹ்ரீம்காரமே வடிவானதும் "ஹ்ருல்லேகா", "ஸௌதாமனீ", "சிந்தாமணி" "புவனேஶ்வரீ", "மாயா", "லஜ்ஜா", "பாதாளம்", என்றெல்லாம் சிறப்புப் பெயர்கள் கொண்டதும் ஆன ஸுந்தரீபீஜ பிண்ட மந்த்ரத்தில் பூர்ண ஸாந்நித்தியத்துடன் விளங்கும் மந்த்ரமூர்த்தி: அதாவது, "ஹ்ரீம்" என்ற அந்த பீஜத்திலேயே தன் பூர்ண ஸ்வரூபமும் அமைந்திருத்தலால், அந்த ஒரே பீஜத்தாலான பிண்ட மந்த்ரத்தை ப்ரேமையுடன் ஜபித்து உபாஸிக்கும் பக்தர்களுக்கு, தன் "பூர்த்திவித்யை"யான வித்யாராஜ்ஞியை உபாஸித்தால் உண்டாகும் பலனை அப்படியே அளித்தருள்கிறாள் தேவி—என்பது கருத்து.

264. ह्रीं कृष्णरक्तमानिनी — ஹ்ரீம்க்ருஷ்ணரக்தமானினீ —

யாவராலும் எளிதில் உணர முடியாதவளாயினும் ஹ்ரீம்காரத்தின் ஏகாக்ரமான ப்ரேம பூர்ண த்யானத்தால் ஒருவாறு உணரத்தக்கவள்: அதாவது இங்கு "க்ருஷ்ணரக்த" என்ற சொல் நிறத்தைக் குறிப்பதல்ல. ஜீவர்களுக்குத் தன் மீது அளவு கடந்த ப்ரேமை உண்டாகச் செய்து அவர்களைத் தன்பால் ஈர்க்கும் காந்த ஶக்தி படைத்தவள்—என்பது இதன் கருத்து.

அதாவது, இங்கு "க்ருஷ்ண"(कृष्ण) என்றால் "ஜீவர்களைத் தன்பால் ஈர்ப்பவள் என்றும் "ரக்த" (रक्त) என்றால் அன்பே வடிவானவள்" என்றும் பொருள் படும்.

265. ह्रींपिण्डकर्त्तरीबीजमालादिमन्त्ररूपिणी - ஹ்ரீம்பிண்டகர்த்தரீபீஜமாலாதி-மந்த்ரரூபிணீ —

ஹ்ரீம் காரம் ஸம்புடமான (1) பிண்ட, (2) கர்த்தரீ, (3) பீஜம், (4) மந்த்ரம், (5) மாலா ஆகிய ஐந்து வகை மந்த்ரங்களின் வடிவினள்.[1]

---

सन् नित्यः चित् चैतन्यम् आनन्दः । नित्यनिरतिशयसुखी । त्रिपदकर्म्मधारयः ।। सच्चिदानन्दः परमात्मा-सगुण ब्रह्म । तस्य सगुणब्रह्मणः व्यक्तस्वरूपिणी इष्टदेवता । विद्याराज्ञीसाधकस्य दक्षिणा कालिका । तस्याः अनन्योपासनन उपासकः स्वयमपि सच्चिदानन्दमूर्त्तिर्भवति । अर्थात् सच्चिदानन्दस्य सगुणब्रह्मणः व्यक्तिरेव श्रीदक्षिणकालिका ।।

குறிப்பு:—நாமம் 294 பார்க்க. முதற்பாகம் பக்கம் 182; 392; 420; 431; 444 பார்க்க. மேலும், காலிகை சாமுண்டாவாக ஆவிர்பவித்த அவஸரத்தில் அந்த மூர்த்தியின் மூலமந்த்ரமாகிய நவாக்ஷரியில கடைசியில் உள்ள "விச்சே" என்ற அக்ஷரக் கூட்டு ஸச்சிதானத்தைக் குறிப்பிடுகிறது.

1. மந்த்ரங்கள் அவற்றில் அடங்கும் பீஜங்களின் எண்ணிக்கையைப் பொறுத்து, (1) பிண்டம் (2) கர்த்தரீ (3) பீஜம் (4) மந்த்ரம் (5) மாலா என்று ஐந்து வகைப்படும்.

266. ह्रीं निर्वाणमयी—ஹ்ரீம் நிர்வாணமயீ—

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கு எளிதில் பேரின்ப ஸ்திதியான முக்தி நிலை ஸித்திக்க அருள்பவள்.[2]

267. ह्रींकारमहाकालमोहिनी—ஹ்ரீம்காரமஹாகாலமோஹிணீ—

தன் அளவு கடந்த ப்ரேமையாலும் இணையற்ற பேரழகாலும் ஆனந்த நடனத்தாலும் அருளிச் செயல்களாலும் மஹாகாலரை மயக்கிக் கொண்டே ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞீ உபாஸகர்களுக்கும் இந்த ஆனந்தநிலை ஸித்திக்க அருள்பவள்.

---

அவையாவன:—(1) ஒரே ஒரு பீஜம் கொண்டது பிண்ட மந்தரம். (2) இரண்டு பீஜங்கள் கொண்டது கர்த்தரீ. (3) மூன்றிலிருந்து ஒன்பது பீஜங்கள் வரை கொண்டது பீஜமந்த்ரம். (4) பத்திலிருந்து இருபது பீஜங்கள் வரை கொண்டது மந்த்ரம். (5) இருபதுக்கு மேலான பீஜங்கள் கொண்டது மாலா மந்த்ரம்.

—நித்தியா தந்த்ரம்.

2एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति। स्थित्वास्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ।। —பகவத்கீதை - II - 72.

स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ।। —கீதை - V - 24.
शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ।। —கீதை - VI - 15.

सर्वदुःखोपरमात्मकत्वात् निरतिशयानन्दरूपत्वाच्च परमपुरुषार्थकैवल्यरूपं ब्रह्मनिर्वाणम् ऋच्छति इत्यर्थः ।। —வாசஸ்பத்யம் - 4102.

ஶாக்த உபாஸகர்கள் யோகாப்பியாஸ முறையில் தேவீ மந்த்ரங்களைத் தம் மூலாதாராதி சக்ர ஸ்தானங்களில் பின்வமாறு ந்யாஸம் செய்து த்யானம் செய்து நிர்வாண நிலை ஸித்திக்கப் பெற்று நித்தியானந்தம் அடைகிறார்கள்:—

नाभिदेशे जप्ये प्रणवपुटितमातृकापुटितत्वाभीष्टमन्त्रे ।।...... कुल्लुकां मूर्द्ध्नि सञ्जप्य हृदि सेतुं विचिन्तयेत् । महासेतुं विशुद्धे तु षोडशारे समुद्धरेत् ।। मणिपूरे तु निर्वाणं महाकुण्डलिनीमधः । स्वाधिष्ठाने कामबीजं राकिणीमूर्द्ध्नि संस्थितम्।। विचिन्त्य विधिवद्देवि मूलाधारान्तिकाच्छिवे। विशुद्धान्तं स्मरेद्देवि बिसतन्तुं तनीयसीम् ।। देवीस्थानं द्विजिह्वान्तं मन्त्रमूलावृतं मुहुः ।।

—நிர்வாண தந்த்ரம்.

तत्र निर्वाणं यथा—अथ वक्ष्यामि निर्वाणं शृणु सारहितानघे । प्रणवं पूर्वमुच्चार्य्य मातृकाद्यं समुच्चरेत् । मामृकार्णां समस्तांश्च पुनः प्रणवमुच्चरेत् । एवं पुटितमूलन्तु प्रजपेन्मणिपूरके ।। एवं निर्वाणमीशानि यो न जानाति पामरः । कल्पकोटिसहस्रेषु तस्य सिद्धिर्न जायते ।

—ஆகமவிலாஸ தந்த்ரம்.

268. ह्रीमती — ஹ்ரீம்மதீ —

ஹ்ரீம்கார பீஜத்தாலான பிண்ட மந்த்ரத்திற்கு உரியவள்; மற்றும் அந்த மந்த்ரமே வடிவமான மந்த்ரமூர்த்தி.

269. ह्रींपराह्लादा — ஹ்ரீம்பராஹ்லாதா —

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ஜபிப்பதே நம் வாழ்நாளில் மிக உத்தமமான செயல் என்ற ஸித்தாந்தத்துடன் உபாஸித்து மகிழும் யோகினி-களுக்கு எல்லையற்ற பேரானந்தத்தை அருள்பவள்.

270. ह्रीं — ஹ்ரீம் —

தர்மார்த்த காமமோக்ஷங்களின் ஸ்வரூபமான ஹ்ரீம்காரமே வடிவினள். குறிப்பு:— நாமம் 263 பார்க்க. ஸஹஸ்ரநாம நாமம் 173 ஒப்புநோக்குக.

271. ह्रींकारगुणावृता — ஹ்ரீம்காரகுணாவ்ருதா —

அடிப்படையாக நிர்க்குண ஸ்வரூபிணி ஆயினும், ஜகன்மாதாவானதால் த்ரிகுணகாரமான தன் மாயாவரணத்தால், ஹ்ரீம் காரத்தின் ஒலி ஓட்டத்தின் மூலம் பஞ்ச க்ருத்யம் செய்வதால் ஸகுணமாக இயங்கி அருளும் கருணாமூர்த்தி.

272. ह्रीमादिसर्वमन्त्रस्था — ஹ்ரீமாதிஸர்வமந்த்ரஸ்தா —

ஹ்ரீம்காரம் முதலிய ஸர்வ பீஜங்களிலும் தானே பூர்ண ஸாந்நித்தியத்துடன் இயங்கி அருளும் ஆதி பராசக்தி மூர்த்தி; அதாவது ஸர்வ மந்த்ர ஸாந்நித்தியமான மந்த்ரமூர்த்தி.

273. ह्रींकारज्वलितप्रभा — ஹ்ரீம்காரஜ்வலிதப்ரபா —

ஹ்ரீம்காரத்தின் ஒலி ஓட்டத்தால், ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ், ஆகிய பரமாத்ம குணங்கள் பூர்ணமாக உள்ள மஹாகாலரை வசப்படுத்திய தன் மாயையின் இயல்பால் எவராலும் தாங்கமுடியாத ஜ்யோதிஸ் ப்ரபையை வீசுபவள்.

274. ह्रींकारोर्जितपूजेष्टा — ஹ்ரீம்காரோர்ஜிதபூஜேஷ்டா —

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியை ப்ரயோகித்து சக்ர ஆவரண பூஜை, விக்ரஹ ஆராதனை, ஹோமம், தர்ப்பணம், பாராயணம், கீதாதி உபசாரங்கள், முதலியவற்றுடன் நிகழ்த்தப்படும் உத்ஸவங்களில் பெரிதும் மகிழும் மஹோல்லாஸ மூர்த்தி.

275. ह्रींकारमातृकाम्बिका — ஹ்ரீம்காரமாத்ருகாம்பிகா —

ஹ்ரீம்காரத்தையும் அதன் ஸ்போடமாகப் பெருகிய மாத்ருகா மண்டலத்தையும் ஸர்வ பீஜங்களையும் அவற்றின் பலவகைத்தான கூட்டுக்களாலான கோடிக் கணக்கான மந்த்ரங்களையும் உத்பத்தி செய்தருளிய மந்த்ரமூர்த்தி.

**276. ह्रींकारध्यानयोगेष्टा—ஹ்ரீம்காரத்$_4$யானயோகே$_3$ஷ்டா—**

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாக உபாஸகனின் ஹ்ருதயத்தில் ஸகுணப்ரஹ்ம ஸாக்ஷாத்கார ஸ்வரூபத்யானம் வீர்யமாகி, ஸமாதி ஸித்தித்து ஆத்மாவின் நிர்க்குணமான தன்மையில் மனம் கரைந்து ஏற்படும் லய யோகத்தில் பெரிதும் மகிழும் யோக மூர்த்தி.

**277. ह्रींकारमन्त्रवेगिनी—ஹ்ரீம்காரமந்த்ரவேகி$_3$னீ—**

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஜபத்தின் வீர்யத்திலும் வேகத்திலும் உறைந்து மகிழும் வித்யுத் ஶக்தி மூர்த்தி.

**278. ह्रीमाद्यन्तविहीनस्वरूपिणी—ஹ்ரீமாத்$_3$யந்தவிஹீனஸ்வரூபிணீ—**

ஹ்ரீம்காரத்தின் ஸ்போடமாகப் பெருகிய இந்த ப்ரபஞ்சத்தினூடே, "ஆதி-மத்தியம்-அந்தம்" என்ற பாகுபாடு இல்லாமல் முழுமையாக வ்யாபித்து அதனில் நிகழ வேண்டிய பஞ்ச க்ருத்ய காரியங்கள் யாவற்றையும் பராமரித்து நிர்வஹித்தருளும் பரம தயாபர மூர்த்தி.

**279. ह्रींपरात्परा—ஹ்ரீம்பராத்பரா—**

ஹ்ரீம்காரம் ஸம்புடமான வித்யாராஜ்ஞியின் ஸ்போடமாகப் பெருகிய எல்லா அண்டங்களுக்கும் மூல காரணமான வித்யுத் ஶக்திக்கு உத்பத்தி ஸ்தானமான ஆத்யா பராஶக்தி மூர்த்தி.

**280. ह्रींभद्रात्मजरोचिष्णुहस्ताब्जवरर्णिनी—ஹ்ரீம்ப$_4$த்$_3$ராத்மஜரோசிஷ்ணுஹஸ்தாப்ஜ$_3$வரவர்ணினீ—**

கரத்தில் "பத்ராத்மஜன்" என்ற பெயர் கொண்ட மிக அழகியதும், ஹ்ரீம்காரம் ஸம்புடமான காலீ த்ரிதாரியின் சின்னமானதும், மிக மங்கலமானதுமான பட்டாக்கத்தியை ஏந்தியவளும், வாயால் வர்ணிக்க முடியாதவளும், மனதால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாதவளும், ஆன அலோக ஸாமான்யமான உத்தமமான பேரழகி.

स्वाहाकारात्तहोमेष्टा स्वाहा स्वाधीनवल्लभा ॥ ८५ ॥
स्वान्तप्रसादनैर्मल्यवरदानाभिवर्षिणी ।
स्वाधिष्ठानादिपद्मस्था स्वाराज्यसिद्धिदायिका ॥ ८६ ॥

स्वाध्यायतत्परप्रीता स्वामिनी स्वादलोलुपा ।
स्वाच्छन्द्यरमणक्लिन्ना स्वाद्वीफलरसप्रिया ।। ८७ ।।
स्वास्थ्यलीनजपप्रीता स्वातन्त्र्यचरितार्थका ।
स्वादिष्ठचषकास्वादप्रेमोल्लासितमानसा ।। ८८ ।।
हायनाद्यनिबद्धात्मा हाटकाद्रिप्रदायिनी ।
हारीकृतनृमुण्डालिर्हानिवृद्ध्यादिकारणा ।। ८९ ।।
हानदानादिगाम्भीर्य्यदायिनी हारिरूपिणी ।
हारहारादिमाधुर्य्यमदिरापानलोलुपा ।। ९० ।।
हाटकेशादितीर्थस्थकालकालप्रियङ्करी ।। ९०½

ஸ்வாஹாகாராத்தஹோமேஷ்டா ஸ்வாஹா ஸ்வாதீனவல்லபா ।। 85 ।।
ஸ்வாந்தப்ரஸாதநைர்மல்யவரதாநுபிவர்ஷிணீ ।
ஸ்வாதிஷ்டாநுதிபத்மஸ்தா ஸ்வாராஜ்யஸித்திதாயிகா ।। 86 ।।
ஸ்வாத்யாயதத்பரப்ரீதா ஸ்வாமினீ ஸ்வாதலோலுபா ।
ஸ்வாச்சந்த்யரமணக்லின்னா ஸ்வாத்வீபலரஸப்ரியா ।। 87 ।।
ஸ்வாஸ்த்யலீனஜபப்ரீதா ஸ்வாதந்த்ர்யசரிதார்த்தகா ।
ஸ்வாதிஷ்டசஷகாஸ்வாதப்ரேமோல்லாஸிதமானஸா ।। 88 ।।
ஹாயநாத்யநிபத்தாத்மா ஹாடகாத்ரிப்ரதாயினீ ।
ஹாரீக்ருதந்ருமுண்டாலிர்ஹானிவ்ருத்த்யாதிகாரணா ।। 89 ।।
ஹானதாநாதிகாம்பீர்ய்யதாயினீ ஹாரிரூபிணீ ।
ஹாரஹாராதிமாதுர்ய்யமதிராபானலோலுபா ।। 90 ।।
ஹாடகேஶாதிதீர்த்தஸ்தகாலகாலப்ரியங்கரீ ।। 90½ ।।

281. स्वाहाकारात्तहोमेष्टा—ஸ்வாஹாகாராத்தஹோமேஷ்டா—

காலபைரவரால் திட்டப்படுத்தப்பட்டபடி, அக்னி ஶக்தியாகிய ஸ்வாஹா-காரத்துடன் ஆஹுதி செய்யும் மரபு கொண்ட ஹோம க்ரமங்களில் பெரிதும் மகிழும் யஜ்ஞ மூர்த்தி.

282. स्वाहा — ஸ்வாஹா —

ப்ரபஞ்சதஹன ஶக்தியாகிய* ஜ்ஞாநாக்னி ஶக்தி ஸ்வரூபிணீ.

283. स्वाधीनवल्लभा — ஸ்வாதீனவல்லபா —

தன் ப்ராணநாயகரும் மஹோந்நதமான யோகீஸ்வரரும் ஆன மஹாகாலரைத் தன் வஶப்படுத்தி மகிழும் வஶ்ய மூர்த்தி.

284. स्वान्तप्रसादनैर्मल्यवरदानाभिवर्षिणी — ஸ்வாந்தப்ரஸாதநைர்மல்யவரதாநாபி-வர்ஷிணீ —

பக்தர்களுக்கு கல்மஷமற்ற சித்தமும் கோரிய வரங்களும், நிரதிஶயானந்தமும், நிலைத்த மனஶ்ஶாந்தியும் வரையாது வழங்கி அருளும் பெருவள்ளல்.

285. स्वाधिष्ठानादिपद्मस्था — ஸ்வாதிஷ்டாநாதிபத்மஸ்தா —

பக்தர்கள் உடலில் அமர்ந்த ஷடாதாரங்களிலும் நிலையாய் அமர்ந்து அவர்களுக்கு ஶக்தியும், செயலும், மகிழ்ச்சியும், ஶாந்தியும் வழங்கி அருளும் ஔதார்ய மூர்த்தி.

286. स्वाराज्यसिद्धिदायिका — ஸ்வாராஜ்யஸித்திதாயிகா —

பக்தர்களுக்குத் தம் மனத்தையும், புத்தியையும் எப்பொழுதும் வரம்பு மீறுமல் இயங்குமாறு அடக்கி ஆளும் ஶக்தியையும், ஜீவப்ரஹ்ம ஐக்கிய நித்தியானந்தத்தையும் வழங்கி அருள்பவள்.

287. स्वाध्यायतत्परप्रीता — ஸ்வாத்யாயதத்பரப்ரீதா —

வேதாத்யயனத்தில் கண்ணுங் கருத்துமாய் உள்ளவரிடம் ப்ரீதி கொள்ளும் வேதநாயகி.

288. स्वामिनी — ஸ்வாமினீ —

எல்லா அண்டங்களுக்கும் தேவ, ராக்ஷஸ, மநுஷ்யாதி ஸகல ஜீவராசிகளுக்கும் அதிகாரிணியாக எஜமானி ஸ்தானம் வஹித்து நிர்வஹிப்பவள்.

289. स्वादलोलुपा — ஸ்வாதலோலுபா —

பக்தர்கள் அன்பாக அர்ப்பணிக்கும் மிக மதுரமான பக்ஷ்ய போஜ்யங்களை மகிழ்ச்சியுடன் சுவைத்து அவர்களுக்கு ஆனந்தம் அளித்தருளும் மஹோல்லாஸ மூர்த்தி.

---

*त्वमग्नेर्दाहिका शक्तिर्भवपत्नी च सुन्दरी ।
दग्धुं न शक्तस्त्वदृते हुताशश्च त्वया बिना ॥ —ப்ரஹ்மவைவர்த்த புராணம்-37.

**290. स्वाच्छन्द्यरमणक्लिन्ना — ஸ்வாச்ச$_2$ந்த$_3$்யரமணக்லின்னா —**

தன் ப்ராணநாதருடைய சேர்க்கையில் தன் இஷ்டம் போல் அவருடன் கலந்து ஶ்ருங்கார ரஸம் அநுபவிக்கும் ஸ்வாதீனபதிகா.

**291. स्वाद्वीफलरसप्रिया — ஸ்வாத$_3$்வீப$_2$லரஸப்ரியா —**

த்ராக்ஷைப் பழரஸத்தைச் சுவைப்பதில் மிகப்ரீதி உள்ளவள்.

**292. स्वास्थ्यलीनजपप्रीता — ஸ்வாஸ்த$_2$்யலீனஜபப்ரீதா —**

ஒருவிதமான பதற்றமும் இல்லாமல் முழுமனதுடனும் ப்ரேமையுடனும் தன் மந்த்ரத்தை ஜபிக்கும் பக்தர்கள்பால் மகிழ்ந்து அவர்களுக்குப் பேரானந்தத்தையும், மனஶ்ஶாந்தியையும் முக்தியையும் வழங்கி அருளும் மஹேஶ்வரமூர்த்தி.

**293. स्वातन्त्र्यचरितार्थका — ஸ்வாதந்த்ர்யசரிதார்த்த$_2$கா —**

பர்த்தாவை வஶப்படுத்தியமையில் த்ருப்தி அடைந்து மகிழ்பவள்.

**294. स्वादिष्टचषकास्वादप्रेमोल्लासितमानसा — ஸ்வாதி$_3$ஷ்டச$_2$ஷகாஸ்வாத$_3$ப்ரேமோ-ல்லாஸிதமானஸா —**

தனக்கு மிக இஷ்டமான சஷகபானத்தைச் சுவைப்பதில் மிக ப்ரீதியும் உல்லாஸமும் கொண்டு, பக்தர்களுக்கும் இந்த ப்ரஸாதத்தால் தன்னைப் போலவே மகிழ்ச்சியும், ப்ரேமையும் உல்லாஸமும் அளித்து அருளும் ஆனந்த மூர்த்தி.

குறிப்பு:— முதற்பாகம் பக்கம் 182; 392; 420; 431; 444 பார்க்க. த்ரிசதீநாமம் 262 பார்க்க.

**295. हायनाद्यनिबद्धात्मा — ஹாயனாத$_3$்யநிப$_3$த$_3$்த$_4$ாத்மா —**

பிறப்பு, வளர்ச்சி, முதிர்ச்சி, வயது, அழிவு முதலிய பருவ பேதங்களற்று, ஸதா யௌவனப் பருவத்திலேயே இருந்து ப்ரகாசிக்கும் புவன ஸுந்தரி.

**296. हाटकाद्रिप्रदायिनी — ஹாடகாத$_3$்ரிப்ரதா$_3$யினீ —**

தங்கத்தை - அதாவது வாழ்க்கை வசதிகளை - பக்தர்களுக்கு மலையைப்போல் வாரி வழங்கும் பெருவள்ளல்.

**297. हारीकृतनृमुण्डालिः — ஹாரீக்ருதந்ருமுண்ட$_3$ாலி: —**

மனிதர்களின் உடல்களில், சைதன்யத்திற்கு ஆதாரமான ஶிரஸ்ஸுகளைத் தனியாகப் பிரித்த முண்டங்களின் ஸஹஸ்ராரமே மாத்ருகா மணிபீட ஸ்தானமாவ-

தால், அந்த முண்டங்களைக் கோத்த மாலையே தனக்கு உகந்த ஆபரணமாகக் கொண்டு அதனைத் தன் கண்டத்தில் தரித்து ஆனந்திக்கும் யோகமூர்த்தி.

298. ह्रानिवृद्ध्यादिकारणा — ஹானிவ்ருத்த்யாதிகாரணா —

அவரவர் ஊழ்வினைக்கேற்ப ஜீவர்களுக்கு அழிவு-வளர்ச்சி, ஸுகம்-துக்கம், ஜனனம்-மரணம், ஸம்ஸாரம்-மோக்ஷம் ஆகிய கர்ம பலங்களை வழங்கும் ஜகதீஸ்வரீ.

299. हानदानादिगाम्भीर्यदायिनी — ஹானதானாதிகாம்பீர்யதாயினீ —

த்யாகம், கொடை முதலிய தெய்விகப் பண்புகளின் செறிவைப் பக்தர்களுக்கு வழங்கி அருள்பவள்.

300. हारिरूपिणी — ஹாரிரூபிணீ —

இந்த ப்ரபஞ்சத்திலேயே எல்லா ஸ்த்ரீகளுக்கும் மேலான எழில் கொண்டவளாதலால், தன்னைப் பற்றிச் சிந்திப்பவரைக் கூட மயக்கி வசப்படுத்துபவள்.

301. हारहारादिमाधुर्यमदिरापानलोलुपा — ஹாரஹாராதிமாதுர்யமதிராபான-லோலுபா —

த்ராக்ஷாரஸம் முதலிய இனிய மதுபானம் பருகுவதில் மிகப்ரீதி கொண்டவள்.

302. हाटकेशादितीर्थस्थकालकालप्रियङ्करी — ஹாடகேஶாதிதீர்த்தஸ்தகாலகால-ப்ரியங்கரீ —

வடக்கே காசி, தெற்கே திருவாரூர் முதலிய க்ஷேத்திரங்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளின் ஶக்தியாக ஸாந்நித்தியமாகி பக்தர்களை ஆட்கொண்டு அருளும் விஶ்வ ஶக்திமூர்த்தி.

हाहाहूह्वादिगन्धर्वगानश्रवणलालसा ॥ ९१ ॥

हारिकण्ठस्वरस्थाय्यालापनादिरसात्मिका ।
हार्दस्यन्दिकटाक्षप्रपालितोपासकावली ॥ ९२ ॥

हालाहलाशनप्रेमफलिनो हावशालिनो ।
हासप्रकाशवदनाम्भोरुहानन्दिताखिला ॥ ९३ ॥

ஹாஹாஹூஹ்வாதிகந்தர்வகானஶ்ரவணலாலஸா ॥ 91 ॥

कन्यादानादिदानानां कोटिकोटिगुणं फलं ।
दूतीयागादियागानां कोटिकोटिफलं स्मृतम् ।। २ ।।

गङ्गादिसर्वतीर्थानां फलं कोटिगुणं स्मृतम् ।
एकधा पाठमात्रेण सत्यं सत्यं मयोदितम् ।। ३ ।।

कौमारीस्वेष्टरूपेण पूजां कृत्वा विधानत: ।
पठेत् स्तोत्रं महेशानि जीवन्मुक्तस्स उच्यते ।। ४ ।।

कालीचक्रं पुरो दृष्ट्वा पठेदेकाग्रमानसः ।
लभते परमं स्थानं देवीलोके वरानने ।। ५ ।।

महादु:खे महारोगे महासङ्कटके दिने ।
महाभये महाघोरे पठेत्स्तोत्रं महोत्तमम् ।। ६ ।।

सत्यं सत्यं पुनस्सत्यं गोपयेच्च प्रयत्नत: ।। ६½ ।।

அத2 ப2லஸ்ருதி:

ஹ்ருத3யம் பரமேஶானி ஸர்வபாபஹரம் பரம் ।
அஸ்வமேதா4தி3யாகா3னாம் கோடிகோடிகு3ணோத்தரம் ॥ 1 ॥

கன்யாதா3னாதி3 தா3னானாம் கோடிகோடிகு3ணம் ப2லம் ।
தூ3தீயாகா3தி3யாகா3னாம் கோடிகோடிப2லம் ஸ்ம்ருதம் ॥ 2 ॥

க3ங்கா3தி3ஸர்வதீர்த்தா2னாம் ப2லம் கோடிகு3ணம் ஸ்ம்ருதம்
ஏகதா4 பாட2மாத்ரேண ஸத்யம் ஸத்யம் மயோதி3தம் ॥ 3 ॥

கௌமாரீஸ்வேஷ்டரூபேண பூஜாம் க்ருத்வா விதா4னத: ।
படே2த்ஸ்தோத்ரம் மஹேஶானி ஜீவன் முக்தஸ்ஸ உச்யதே ॥ 4 ॥

காலீ சக்ரம் புரோ த்3ருஷ்ட்வா படே2தே3காக்3ரமானஸ: ।
லப4தே பரமம் ஸ்தா2னம் தே3வீலோகே வரானனே ॥ 5 ॥

மஹாது:கே மஹாரோகே மஹாஸங்கடகே தினே ।
3 2 3 3
மஹாபயே மஹாகோரே படேத் ஸ்தோத்ரம் மஹோத்தமம் ॥ 6 ॥
4 4 2
ஸத்யம் ஸத்யம் புனஸ்ஸத்யம் கோபயேச்ச ப்ரயத்னத: ॥ 6½ ॥
3

பரமேஶ்வரியே! இந்த உத்தமமான ஹ்ருதய ஸ்தோத்ரம் பாராயண மாத்திரத்திலேயே ஸர்வ பாபங்களையும் போக்கவல்லது, அஶ்வமேதம் முதலிய யாகங்களின் கோடிகோடி மடங்கு பலன் அளிக்கவல்லது. கன்யாதானம் முதலிய பெரிய தானங்களின் கோடிகோடி மடங்கு பலன் அளிக்கவல்லது. தூதீயாகம் முதலிய யாகங்களின் கோடிகோடி மடங்கு பலன் அளிக்கவல்லது. கங்கை முதலிய ஸகல புண்ய நதிகளின் கோடிக்கணக்கான மடங்கு பலன் அளிக்கவல்லது. இதெல்லாம் அன்றாடம் ஒரு தடவை பாராயணம் செய்த மாத்திரத்திலேயே ஸித்திக்கும். இது ஸத்யம். மறுபடியும் ஸத்யம். நான் உறுதி கூறுகிறேன் - மஹேஶ்வரியே! கௌமாரீ முதலிய தேவீரூபங்களில் ஏதேனுமொரு ரூபத்தைத்தான் தரித்துக்கொண்டு விதிமுறை ப்ரகாரம் ஒருவன் காலீ பூஜையைப் பூர்த்தியாகச் செய்து, அதேரூபத்தில் இந்த ஹ்ருதய ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்தால் அவன் நிச்சயமாக ஜீவன் முக்தன் ஆவான். காலீ சக்ரத்தின் எதிரில் பார்த்துக் கொண்டு ஏகாக்ரசித்தத்துடன் படனம் செய்தால் தேவியினுடைய லோகத்தில் பரமாத்ம ஸ்தானத்தை அடைவான். மஹாதுக்கத்திலும், மஹா வியாதியிலும், பெரிய சங்கடத்திலும், பெருத்த பயத்திலும், கோரபாபத்திலும் தினமும் இந்த மிக உத்தமமான ஸ்தோத்திரத்தை படித்தால் முயற்சியின்றி காப்பாற்றப்படுவான். இது ஸத்யம் இது ஸத்யம். மறுபடியும் ஸத்யம்.

## इति श्री कालीतन्त्रे देवीशङ्करसंवादे श्रीमहाकौतहलं नाम श्रीदक्षिणकालिकाहृदयं सम्पूर्णम्

இதி ஶ்ரீகாலீதந்த்ரே தேவீஶங்கரஸம்வாதே ஶ்ரீமஹா கௌதூஹலம் நாம
3 3
ஶ்ரீதக்ஷிணகாலிகாஹ்ருதயம் ஸம்பூர்ணம் ॥
3 3

இங்ஙனமாக ஶ்ரீ காலீதந்த்ரத்தில் ஶ்ரீ சங்கரர் திருவாய் மலர்ந்தருளிய ஶ்ரீ தக்ஷிணகாலிக ஹ்ருதய ஸ்தோத்திரம் முற்றிற்று.

॥ ॐ ॥

# ॥ अथ श्रीकर्पूरस्तोत्रम् ॥

## அத ஸ்ரீகர்ப்பூர ஸ்தோத்ரம்
2

இது ஒரு மிகச் சிறந்த கௌல ஸ்தோத்திரம்; ஸ்ரீதக்ஷிண காலீ உபாஸனத்திற்கு இது ஓர் இன்றியமையாத வழிகாட்டியாகும். மந்த்ரம், யந்த்ரம், த்யானம், ஸாதனை, ஶரணாகதி, ஸ்துதி, க்ஷமாபணம, பலஶ்ருதி ஆகிய எல்லா விஷயங்களும் இதில் அடங்கி இருக்கின்றன. ஸ்ரீமஹாகாலரே இதை நமக்கு அருளியுள்ளார். இது இருபத்திரண்டு ஶ்லோகங்களில் அடங்கி இருப்பதானது, ஸ்ரீதக்ஷிணகாலிகையின் உபாஸனக்ரமம் இருபத்திரண்டு அக்ஷரங்கள் கொண்ட மூலமந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை அடிப்படையாகக் கொண்டது என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

முதல் ஐந்து ஶ்லோகங்களில் வித்யாராஜ்ஞியின் தளங்களில் அடங்கிய பீஜங்களின் உத்தாரம் வரிசைக்ரமமாக விவரிக்கப்படுகிறது. அதாவது முதல ஶ்லோகத்தில் ''க்ரீம் க்ரீம் க்ரீம்'' என்ற தளம் உருவாகும் வகை விளக்கப்படுகிறது. இரண்டாம் ஶ்லோகத்தில் 'ஹூம் ஹூம்' என்ற தளம் உருவாகும் வகை விளக்கப்படுகிறது. மூன்றும் ஶ்லோகத்தில் ''ஹ்ரீம் ஹ்ரீம்'' என்ற தளம் உருவாகும் வகை விளக்கப்படுகிறது. நான்காம் ஶ்லோகத்தில் ''தக்ஷிணே காலிகே'' என்ற தளம் விவரிக்கப்படுகிறது. ஐந்தாம் ஶ்லோகத்தில் ''க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா'' என்ற ஒன்பது அக்ஷரக்கூட்டு மொத்தமாக விளக்கப்படுகிறது. ஆக இவ்வைந்து ஶ்லோகங்களில் வித்யாராஜ்ஞியின் 22 அக்ஷரங்களும் அவற்றின் வரிசைக்ரமத்தில் விளக்கப்படுவது மட்டுமல்லாமல், அவைகளை ஜபிப்பதால் சித்திக்கும் நற்பயன்களும் விளக்கப்படுகின்றன.

---

### ॥ श्रीकालिकाष्टकम् ॥

#### ध्यानम्

गलद्-रक्त-मुण्डावली-कण्ठ-माला, महा-घोर-रावा-सु-दंष्ट्रा कराला ।
विवस्त्रा श्मशानालया मुक्त-केशी, महा-काल-कामाकुला कालिकेयम् ॥ १ ॥

கலத்-ரக்த-முண்டாவலீ-கண்ட-மாலா, மஹா-கோர-ராவா-ஸு-தம்ஷ்ட்ரா கராலா ।
3 3 3 2 4 3
விவஸ்த்ரா ஶ்மஶானாலயா முக்த-கேஶீ-மஹா-கால-காமாகுலா காலிகேயம் ॥ 1 ॥

ஆறும் ஶ்லோகத்தில் மேற்கூறிய பீஜங்களில் ஒன்றை மட்டும் தனித்தோ, இரண்டோ, மூன்றோ இஞ்ஙனமே எல்லாவற்றையும் சேர்த்தோ, சிலவற்றை அல்லது பலவற்றை மட்டுமோ ''தக்ஷிணே காலிகே'' என்ற தேவியின் திருநாமத்தையும் சேர்த்தோ அல்லது சேர்க்காமலோ, ஜபிப்பதால் கிடைக்கும் நற்பயன்களும் கூறப்படுகின்றன.

பதினெட்டாம் ஶ்லோகத்தில் தேவியின் யந்த்ரம் குறிக்கப்படுகிறது. கடைசி இரண்டு ஶ்லோகங்களில் பலஶ்ருதி கூறப்படுகிறது. இதர ஶ்லோகங்களில் தேவியின் த்யானமும், ஸ்துதியும், உபாஸன ஸாதனக்ரமங்களும் கூறப்படுகின்றன. மொத்தத்தில் இந்த ஸ்தோத்திரம் காலீ உபாஸனத்திற்கே ஒரு கருவூலமாகும். ஆதலால் காலீ வழிபாட்டில் ஈடுபட்ட யாவரும் இதனை பக்தி ஶ்ரத்தையுடன் அநுஸந்திப்பது இன்றியமையாததாகும்.

कर्पूरं मध्यमान्त्यस्वरपररहितं सेन्दुवामाक्षियुक्तं
बीजन्ते मातरेतत्त्रिपुरहरवधु त्रिष्कृतं ये जपन्ति ।
तेषां गद्यानि पद्यानि च मुखकुहरादुल्लसन्त्येव वाचः
स्वच्छन्दं ध्वान्तधाराधररुचिरुचिरे सर्वसिद्धिं गतानाम् ॥ १ ॥

கர்ப்பூரம் மத்யமாந்த்ய ஸ்வரபரரஹிதம் ஸேந்துவாமாக்ஷியுக்தம்
4 3
பீஜந்தே மாதரேதத்த்ரிபுரஹரவது த்ரிஷ்க்ருதம் யே ஜபந்தி ।
3 4
தேஷாம் கத்யானி பத்யானிச முககுஹராதுல்லயந்த்யேவ வாச:
3 3 3 2 3
ஸ்வச்சந்தம் த்வாந்ததாராதரருசிருசிரே ஸர்வஸித்திம் கதானாம் ॥ 1 ॥
2 3 4 4 4 3 4 3

---

भुजे वाम-युग्मे शिरोऽसिं दधाना, वरं दक्ष-युग्मेऽभयं वै तथैव ।
सु-मध्यापि तुङ्ग-स्तना भार-नम्रा, लसद्-रक्त-सृक्क द्वया-सु स्मितास्या ॥२॥

புஜே வாம-யுக்மே ஶிரோऽஸிம் ததாநா, வரம் தக்ஷ-யுக்மேऽபயம் வை ததைவ ।
4 3 3 4 3 3 4 2
ஸு-மத்யாபி துங்க-ஸ்தநா பார-நம்ரா, லஸத் ரக்த-ஸ்ருக்க த்வயா ஸு-
4 3 4 3 3
ஸ்மிதாஸ்யா ॥ 2 ॥

शव-द्वन्द्व-कर्णावतंसा सु-केशी, लसत्-प्रेत-पाणिं प्रयुक्तैक काञ्ची ।
शवाकार-मञ्चाधि-रूढा शिवाभिश्चतुर्दिक्षु-शब्दायमानाभि-रेजे ॥ ३ ॥

ஶவ-த்வந்த்வ-கர்ணாவதம்ஸா ஸு-கேஶீ, லஸத் ப்ரேத-பாணிம்-ப்ரயுக்தைககாஞ்சீ ।
3 3
ஶவாகார-மஞ்சாதி-ரூடா ஶிவாபிஶ்சதுர்திக்ஷு-ஶப்தாயமாநாபி ரேஜே ॥ 3 ॥
4 4 4 3 3 4

ஜகதம்பிகே! த்ரிபுரஸம்ஹார மூர்த்தியாகிய ஸ்ரீ மஹாகாலரின் ப்ரிய-நாயகியே! நீருண்ட மேகம் போல் கரிய சாயலுடன் ஜ்வலிக்கும் பேரழகியே! கர்ப்பூரம் என்ற பதத்தில் மத்தியிலும், முடிவிலும் உள்ள உயிரெழுத்துக்களையும் (அதாவது "அ, ஊ, அ" என்ற உயிர்களையும்) ப, ர, ம் என்ற மெய்களையும் நீக்கி "ஈம்" என்ற மாத்ருகைகளைச் சேர்த்தால் உண்டாகும் "க்ரீம்" என்ற பீஜத்தை மும்முறை மடக்கி இந்த முக்கூட்டை ஜபிப்பவர்கள் எல்லா ஸித்தி-களையும் அடையப் பெறுவர் அவர்களது வாக்கினின்று உரைநடையாகவும், செய்யுளாகவும் ஸப்தப்ரபந்த ஜாலங்கள் மடைதிறந்த வெள்ளம் போல் பெருக்-கெடுத்து ப்ரவஹிக்கும்

ईशानस्सेन्दुवामश्रवणपरिगतो बीजमन्यन्महेशि
द्वन्द्वन्ते मन्दचेता यदि जपति जनो वारमेकं कदाचित् ।
जित्वा वाचामधीशं धनदमपि चिरं मोहयत्यम्बुजाक्षी
वृन्दं चन्द्रार्द्धचूडे प्रभवति स महाघोरशावावतंसे ॥ २ ॥

ஈஶானஸ்ஸேந்துவாமஶ்ரவணபரிகதோ பீஜமன்யன்மஹேஶி
3 3 3
த்வந்த்வந்தே மந்தசேதா யதி ஜபதி ஜனோ வாரமேகம் கதாசித் ।
3 3 3 3 3
ஜித்வா வாசாமதீஶம் தனதமபி சிரம் மோஹயத்யம்புஜாக்ஷீ
4 4 3 3
ப்ருந்தம் சந்த்ரார்த்தசூடே ப்ரபவதி ஸ மஹாகோரஶாவாவதம்ஸே ॥ 2 ॥
3 3 3 3 4 3 4 4

ப்ரபஞ்சாப்ரபஞ்ச விஶ்வேஶ்வரியே! சந்த்ரனின் ஒரு கலையை ஶிரோபூஷணமாகத் தரிப்பவளே! துஷ்கர்மிகளுக்கு மிகப்பயங்கரமானவளே! இரு செவிகளிலும்

---

(காலிகாஷ்டகத்தின் தொடர்ச்சி)

॥ स्तुति ॥

विरिंच्यादि-देवास्त्रयस्ते गुणांस्त्रीन्, समाराध्य कालीं प्रधाना बभूवु: ।
अनादिं सुरादिं मखादिं भवादिं, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ १ ॥

விரிஞ்ச்யாதி-தேவாஸ்த்ரயஸ்தே குணாம்ஸ்த்ரீன், ஸமாராத்ய காலீம் ப்ரதானா பபூவு: ।
3 3 3 4 4 3 4
அனாதிம் ஸுராதிம் மகாதிம் பவாதிம், ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி தேவா: ॥ 1 ॥
3 3 2 3 4 3 3 3 3

---

*कृपि अवकल्कने - मिश्रीकरणे-ऊरप्रत्ययान्त: ॥

कर्पूरम्-स्वनामख्यातगन्धद्रव्यमिश्रीकरणवत् स्वमूलप्रकृत्या पाञ्चभौतिकप्रापञ्चिकसृष्ट्यादिपञ्चकृत्यनिर्वर्त्तनशीलाया: कालिकाया मूलमन्त्रस्य बीजावकल्कननिरूपणम् ॥

காதணிகளாகத் தொங்கும் இரு ஶவங்களுடன் மிளிர்பவளே! மந்த புத்தி உள்ளவனாயினும் யாரேனும் ஒருவன் "ஹ், ஊ, ம்'' என்ற மாத்ருகைகளின் சேர்க்கையால் உண்டாகும் ஹூம் என்ற பீஜத்தை இருமுறை மடக்கி அந்தக்கூட்டை எப்போதாகிலும் ஒரு தடவையாகிலும் ஜபித்தாலும் கூட, அவன் வாக்கின் வன்மையிலும் திறமையிலும் ப்ருஹஸ்பதியையும் வெல்வான்; செல்வத்தில் குபேரனையும் மீறுவான்; எண்ணரிய அழகிய ஸ்த்ரீகளின் குழாங்களை மயக்கிக் கொண்டு நீண்ட காலம் மஹாப்ரபுவாக வாழ்வான்.

குறிப்பு:—"ஸ்த்ரீகளை மயக்கிக் கொண்டு" என்றதானது ஒருயோகி குண்டலினி ஶக்தியுடன் இன்பமயமாகச் சேர்ந்து இயங்குவதைக் குறிக்கிறது.

ईशो वैश्वानरस्थश्शशधरविलसद्वामनेत्रेण युक्तो
बीजन्ते द्वन्द्वमन्यद्विगलितचिकुरे कालिके ये जपन्ति ।
द्वेष्टारं घ्नन्ति ते च त्रिभुवनमसिते वश्यभावं नयन्ति
सृक्कद्वन्द्वास्रधाराद्वयधरवदने दक्षिणे कालिकेति ॥ ३ ॥

ஈஶோ வைஶ்வாநரஸ்தஶ்ஶஶதரவிலஸத்வாமநேத்ரேண யுக்தோ
பீஜந்தே த்வந்த்வமன்யத்விகலிதசிகுரே காலிகே யே ஜபந்தி ।
த்வேஷ்டாரம் க்னந்தி தே ச த்ரிபுவனமஸிதே வஶ்யபாவம் நயந்தி
ஸ்ருக்கத்வந்த்வாஸ்ரதாராத்வயதரவதனே தக்ஷிணே காலிகேதி ॥ 3 ॥

---

जगन्मोहनीयम् तु वाग्वादिनीयम्, सुहृद्-पोषिणी शत्रु-संहारणीयम् ।
वच-स्तम्भनीयम् किमुच्चाटनीयम्, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ २ ॥

ஜகன்மோஹனீயம் து வாக்வாதினீயம், ஸுஹ்ருத்-போஷிணீ ஶத்ரு-ஸம்ஹாரணீயம் ।
வச-ஸ்தம்பனீயம் கிமுச்சாடனீயம், ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி தேவா: ॥ 2 ॥

इयं स्वर्ग-दात्री पुनः कल्प-वल्ली, मनोजांस्तु कामान् यथार्थं प्रकुर्यात् ।
तथा ते कृतार्था भवन्तीति नित्यं, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ ३ ॥

இயம் ஸ்வர்க்க தாத்ரீ புன: கல்ப-வல்லீ, மனோஜாம்ஸ்து காமான் யதார்த்தம் ப்ரகுர்யாத் ।
ததா தே க்ருதார்த்தா பவந்தீதி நித்யம், ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி தேவா: ॥3॥

மஹாமங்கல மூர்த்தியே! ஹே தக்ஷிண காலிகையே! பரவிப்படர்ந்த கூந்தலழகியே! கரிய சாயல் கொண்ட ஸுந்தரியே! நிர்க்குண ஸ்வரூபிணியே! வாயின் இரு ஓரங்களிலும் இரத்தக்கசிவு கொண்டவளே! "ஹ், ர், ஈம்" என்ற மாத்ருகைகளின் சேர்க்கையால் ஏற்படும் "ஹ்ரீம்" என்ற பீஜத்தை இருமுறை மடக்கி அந்தக் கூட்டை எவர்கள் ஜபிக்கிறார்களோ அவர்கள் சத்ருக்களையும் அழித்து மூவுலகங்களையும் தம் வசப்படுத்தி ஸுகித்து வாழ்வர்.

ऊर्ध्वं वामे कृपाणं करतलकमले च्छिन्नमुण्डं तथाधः
सव्येऽभीतिं वरञ्च त्रिजगदघहरे दक्षिणे कालिके च ।
जप्त्वैतन्नामवर्णं तव मनुविभवं भावयन्त्येतदर्थं
तेषामष्टौ करस्थाः प्रकटितवदने सिद्धयस्त्र्यम्बकस्य ॥ ४ ॥

ஊர்த்வம் வாமே க்ருபாணம் கரதலகமலே ச்சின்னமுண்டம் ததாத:
4 2 3 2 4
ஸவ்யேऽபீதிம் வரஞ்ச த்ரிஜகதகஹரே தக்ஷிணே காலிகே ச ।
4 3 3 4 3
ஜப்த்வைதந்நாமவர்ணம் தவ மநுவிபவம் பாவயந்த்யேததர்த்தம்
4 4 3 2
தேஷாமஷ்டௌ கரஸ்தா: ப்ரகடிதவதனே ஸித்தயஸ்த்ர்யம்பகஸ்ய ॥ 4 ॥
2 3 3 4 3

மூவுலகங்களிலும் வாழும் எல்லா ஜந்துக்களின் பாபங்களையும் துக்கங்களையும், விபத்துக்களையும் அழித்தருள்பவளே! மஹாமங்கலரூபிணியே! ஹே ஸ்ரீதக்ஷிணகாலிகே! இடது மேற்கரத்தில் "பத்ராத்மஜன்" என்ற கட்கத்தையும், இடது

---

सुरा-पान-मत्ता सु-भक्तानुरक्ता, लसत्-पूत चित्ते सदाऽऽविर्भवते ।
जप-ध्यान-पूजा-सुधा-धौत-पङ्का, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ ४ ॥

ஸுரா-பான-மத்தா-ஸு-பக்தாநுரக்தா, லஸத்-பூதசித்தே ஸதாऽऽவிர்பவதே ।
4 3 4
ஜப-த்யான-பூஜா-ஸுதா-தௌத-பங்கா, ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி
4 4 4 3 3
தேவா: ॥ 4 ॥
3

चिदानन्द-कन्दं हसन् मन्द-मन्दं-शरच्चन्द्र-कोटि-प्रभा-पुञ्ज-बिम्बम् ।
मुनीनां कवीनां हृदि द्योतयन्तं, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ ५ ॥

சிதானந்த-கந்தம் ஹஸன் மந்த மந்தம்-ஶரச்சந்த்ர-கோடி-ப்ரபா-புஞ்ச பிம்பம்
3 3 3 3 3 3 4 3 3
முனீனாம் கவீனாம் ஹ்ருதி த்யோதயந்தம், ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி
3 3 3 3
தேவா: ॥ 5 ॥
3

கீழ்க்கரத்தில் வெட்டப்பட்ட மனிதனின் ஶிரஸ்ஸையும், வலது மேற்கரத்தில் அபய முத்திரையையும், வலது கீழ்க்கரத்தில் வரத முத்திரையையும் தரித்தருள்பவளே! அதிப்ரகாஶமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் வதனம் கொண்ட பேரழகியே! எவர்கள் இங்ஙனமான உனது திருவுருவத்தை த்யானித்துக்கொண்டே உனது மூலமந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை, அதன் மஹிமையையும் அர்த்த பாவத்தையும், உனது திருநாமத்தின் அக்ஷரங்களினுள் பொலிந்து கிடக்கும் பரம ரஹஸ்யமான தாத்பர்யங்களையும் உணர்ந்து கொண்டே ஜபிக்கிறார்களோ அவர்கள் முக்கண் படைத்த ஈஶ்வரனின் வரப்ரஸாதமாகிய ''ஐஶ்வர்யம்'' எனப்படும் அஷ்டமஹா-ஸித்திகளும் தம் கைப்பொருளென வஶமாகக் கிடைக்கப்பெற்று இனிது வாழ்வர்.

वर्गाद्यं वह्निसंस्थं विधुरतिललितं तत्त्रयं कूर्चयुग्मं
लज्जाद्वन्द्वञ्च पश्चात्स्मितमुखि तदधष्ठद्वयं योजयित्वा ।
मातर्ये ये जपन्ति स्मरहरमहिले भावयन्तस्स्वरूपं
तेलक्ष्मीलास्यलीलाकमलदलदृशः कामरूपा भवन्ति ॥ ५ ॥

வர்க்காத்யம் வஹ்நிஸம்ஸ்தம் விதுரதிலலிதம் தத்த்ரயம் கூர்ச்சயுக்மம்
3 3 2 4 3
லஜ்ஜா த்வந்த்வஞ்ச பஶ்சாத்ஸ்மிதமுகி தததஷ்டத்வயம் யோஜயித்வா ।
3 3 2 3 4 2 3
மாதர்யே யே ஜபந்தி ஸ்மரஹரமஹிலே பாவயந்தஸ்ஸ்வரூபம்
4
தேலக்ஷ்மீலாஸ்ய லீலாகமலதலத்ருஶ: காமரூபா பவந்தி ॥ 5 ॥
3 3 4

தாயே! ஆனந்த ஜ்யோதிஸ் வீசும் புன்முறுவல் பூத்த ஸுந்தரவதனப் பேரழகியே! மன்மதனின் உடலை அழித்தருளிய பரமசிவனின் பத்னியே! ஐம்பத்-

---

महा-मेघ-काली सु-रक्तापि शुभ्रा, कदाचिद् विचित्राकृतिर्योग माया ।
न बाला न वृद्धा न कामातुरापि, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ ६ ॥

மஹா-மேக-காலீ ஸு-ரக்தாபி ஶுப்ரா, கதாசித் விசித்ராக்ருதிர்யோக மாயா ।
4 4 3 3 3
ந பாலா ந வ்ருத்தா ந காமாதுராபி, ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி தேவா: ॥ 6 ॥
3 3 4 3 3 3

क्षमस्वापराधं महा-गुप्त-भावं, मया लोक-मध्ये प्रकाशी-कृतं यत् ।
तव ध्यान-पूतेन चापल्य-भावात्, स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ॥ ७ ॥

க்ஷமஸ்வாபராதம் மஹா குப்த பாவம், மயா லோக-மத்யே ப்ரகாஶீ-க்ருதம் யத் ।
4 3 4 4
தவ த்யான-பூதேன சாபல்ய-பாவாத், ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி தேவா: ॥ 7 ॥
4 4 3 3 3

தொரு மாத்ருகைகளுள் வ்யஞ்ஜன வர்க்கத்தின் முதல் அக்ஷரமான ககாரத்தின் மீது அக்னி பீஜமாகிய र காரம் (ரேபம்) ஏறி அதனுடன் ரதி பீஜமாகிய ई காரமும் இவ்வெல்லாவற்றின் மேல் சந்த்ர பீஜமாகிய அநுஸ்வாரமும் (பிந்து) ஏறியதால் மிக்க அழகுடன் பொலிந்து இங்ஙனமாக உருவான க்ரீ என்ற பீஜாக்ஷரத்தை மும்முறை மடக்கிய முக்கூட்டையும், அதனையடுத்து கூர்ச்ச பீஜமாகிய हूं காரத்தை இருமுறை மடக்கியும், அதன் மேல லஜ்ஜா பீஜமாகிய ह्रीं காரத்தை இருமுறை மடக்கியும் அதனை அடுத்துக் கடைசியில் ஸ்வாஹாகாரத்தை இணைத்து *இங்ஙனமாக உருவாகிய "க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா" என்ற ஒன்பது அக்ஷரங்களாலான மஹாவித்யையை எவர்கள் உனது ஸ்வரூபத்தை மனதில் நிலையாக இருத்திக் கொண்டும் பீஜத்தின் அர்த்தானுசந்தானத்துடனும் ஜபிக்கிறார்களோ அவர்கள் ஸ்ரீமஹாலக்ஷ்மீ தன் கையில் விளையாட்டாக வைத்திருக்கும் கமலத்தின் தளங்கள் போல் அழகிய கண்களுடன் பொலிவார்கள்; மன்மதனை ஒத்த அழகர்களாவார்கள். தாம் விரும்பிய உருவம் எடுத்துக்கொள்ள வல்லமை பெறுவார்கள். தேவியின் மந்த்ரமே விக்ரஹமானவர்களாகி வித்யா ஸ்வரூபிகளாக வீர்யமாக வாழ்வர்.

प्रत्येकं वा द्वयं वा त्रयमपि च परं बीजमत्यन्तगुह्यं
त्वन्नाम्ना योजयित्वा सकलमपि सदा भावयन्तो जपन्ति ।
तेषां नेत्रारविन्दे विहरति कमला वक्त्रशुभ्रांशुबिम्बे
वाग्देवी दिव्यमुण्डस्रगतिशयलसत्कण्ठपीनस्तनाढ्ये ।। ६ ।।

ப்ரத்யேகம் வா த்வயம் வா த்ரயமபிச பரம் பீஜமத்யந்தகுஹ்யம்
த்வந்நாம்னு யோஜயித்வா ஸகலமபி ஸதா பாவவந்தோ ஜபந்தி ।
தேஷாம் நேத்ராரவிந்தே விஹரதி கமலா வக்த்ரஶுப்ராம்ஶுபிம்பே
வாக் தேவீ திவ்யமுண்டஸ்ரகதிஶயலஸத்கண்டபீனஸ்தனாட்யே ।। 6 ।।

---

यदि ध्यान-युक्तं पठेत् यो मनुष्यस्तदा सर्व-लोके विशालो भवेच्च ।
गृहे चाष्ट-सिद्धिर्मृते चापि मुक्तिस्स्वरूपं त्वदीयं न विन्दन्ति देवाः ।। ८ ।।

யதி த்யான-யுக்தம் படேத் யோ மநுஷ்யஸ்ததா ஸர்வ-லோகே விஶாலோ பவேச்ச ।
க்ருஹே சாஷ்ட ஸித்திர்ம்ருதே சாபி முக்திஸ்ஸ்வரூபம் த்வதீயம் ந விந்தந்தி தேவா: ।।

—ஸ்ரீ ஆதிசங்கரரால் இயற்றப்பட்ட காலிகாஷ்டகம்.

---

*ஶ்லோகத்திலுள்ள ठद्वयं என்ற சொல் ठः ठः என்று பொருள்படும், அதாவது ठ காரத்தின் இரட்டையானது स्वाहा என்ற மந்த்ரத்தைக் குறிக்கும். இதுவே அக்னியின் ஶக்தி द्विठस्स्वाहाऽनलप्रिया—வர்ணாபிதானம்.

மஹத்தான தைவாம்ஶ தத்துவங்களின் ஸூசகமானவைகளும், மிகப்பிரகாசமானவைகளுமான ஐம்பத்தொரு முண்டங்களாலான மாலை அணிந்திருத்தலால் அதிஜாஜ்வல்யமாக ஶோபிக்கும் கழுத்தும் நன்ருகப் பருத்து உருண்டு திரண்ட ஸ்தன பாரங்களுடன் ஜ்வலிக்கும் அழகிய மார்பகமும் கொண்ட அதி அற்புதமான ஸுந்தரியே! எல்லா வித்யைகளிலும் ஸர்வோத்தமமானதும் மிக மிக ரஹஸ்யமாகக் காப்பாற்ற வேண்டியதும ஆன ஸ்ரீவித்யாராஜ்ஞியின் ஒவ்வொரு பீஜத்தையும் தனித்தனியாகவோ, ஏதேனும் இரண்டு மட்டுமோ, அல்லது மூன்று மட்டுமோ சேர்ந்த கூட்டாகவோ, அல்லது எலலா பீஜங்களேயும் மட்டும் மொத்தமாகவோ, அல்லது இவற்றை எல்லாம் உனது திருநாமத்துடன் சேர்த்தோ அல்லது சேர்க்காமலோ, எவர்கள உனது திவ்ய ஸ்வரூபத்தை ப்ரேமையுடன் தியானித்துக் கொண்டும் அர்த்தபாவாநுசந்தானத்துடனும் ஸதாகாலமும் தொடர்ச்சியாக ஜபிக்கிருர்களோ அவர்கள் கண்ணெதிரில ஸ்ரீமஹாலக்ஷ்மி லீலைகள் புரிவாள்; சந்த்ர பிம்பம் போன்ற அவர்களது வதனத்தில வாக்தேவியாகிய ஸ்ரீஸரஸ்வதி ஆனந்தமாக விளையாடுவாள்.

गतासूनां बाहुप्रकरकृतकाञ्चीपरिलसन्-
नितम्बां दिग्वस्त्रां त्रिभुवनविधात्रीं त्रिनयनाम् ।
श्मशानस्थे तल्पे शवहृदि महाकालसुरत
प्रसक्तां त्वां ध्यायन् जननि जडचेता अपि कविः ॥ ७ ॥

கதாஸூனும் பாஹுப்ரகரக்ருதகாஞ்சீபரிலஸன்-
நிதம்பாம் திக்வஸ்த்ராம் த்ரிபுவனவிதாத்ரீம் த்ரிநயனும் ||
ஶ்மஶானஸ்தே தல்பே ஶவஹ்ருதி மஹாகாலஸுரத-
ப்ரஸக்தாம் த்வாம் த்யாயன் ஜனனி ஜடசேதா அபி கவி: ॥ 7 ॥

தாயே மஹாமந்த புத்தியுள்ள ஒரு மஹாமூடனுயினும் கூட எவனேனும் ஒருவன், ஸூர்யன் சந்த்ரன் அக்னி ஆகிய முச்சுடர்களேத் தன் மூன்று கண்களாகப் படைத்தவளாகவும், தனது பஞ்சக்ருத்யங்கள் மூலம் மூவுலகத்தையும் பரிபாலித்து நிர்வஹித்தருள்பவளாகவும், ஶவங்களின் கரங்களாலான மேகலையை இடையில் தரிப்பவளாகவும், திக்குகளேயே வஸ்த்ரமாகப் பூண்டவளும், அதாவது உடலில் வஸ்த்ரமே தரிக்காதவளாகவும், ஶ்மஶானத்தில் சிதையின் மீது ஶவரூபமாகச் செயலற்றுக் கிடக்கும் ஸ்ரீமஹாகாலரின் மீது அவரது ஹ்ருதயத்தில் அமர்ந்து அவருடைய சேர்க்கையில் இன்புற்று மகிழ்பவளாகவும், இங்ஙனமான உனது ஸ்வரூபத்தை தியானிக்கிருனே அவன் ஆத்ம ஜ்ஞானமும் ப்ரஹ்மானந்தமும் ஸித்திக்கப்பெற்ற மஹாகவிகளுள் ஶ்ரேஷ்டனுக இனிது வாழ்வான்.

शिवाभिर्घोराभिश्शवनिवहमुण्डास्थिनिकरैः
परं सङ्कीर्णायां प्रकटितचितायां हरवधूम् ।
प्रविष्टां सन्तुष्टामुपरि सुरतेनातियुवतीं
सदा त्वां ध्यायन्ति क्वचिदपि न तेषां परिभवः ॥ ८ ॥

ஶிவாபிர்கோராபிஶ்ஶவநிவஹமுண்டாஸ்திநிகரை:
4 4 4 3 2
பரம் ஸங்கீர்ணாயாம் ப்ரகடிதசிதாயாம் ஹரவதூம் ।
4
ப்ரவிஷ்டாம் ஸந்துஷ்டாமுபரி ஸுரதேநாதியுவதீம்
ஸதா த்வாம த்யாயந்தி க்வசித்வாபி ந தேஷாம் பரிபவ: ॥ 8 ॥
3 4 3 4

தாயே க்ரூரமான பெண் நரிகள் கூட்டங்கூட்டமாகக் குழுமியதும், ஏராளமான ஶவங்களும், முண்டங்களும் கணக்கற்ற எலும்புகளும் குவிந்து கிடப்பதுமான ஶ்மஶானத்தில் சிதையில் ஶவரூபமாகச் செயல் மாண்டு விழுந்து கிடக்கும் ஸ்ரீமஹாகாலரின் மீது அமர்ந்து அத்யந்த சந்தோஷத்துடன் அவருடைய சேர்க்கை இன்புறவில் பேருவகை பூத்த மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்துள்ளவளாகவும், நவயௌவனப்பருவத்தில் ஜ்வலிக்கும் அதிமோஹன ஸௌந்தரியான மடந்தையாகவும், பக்தர்களின் தாபத்ரயங்களைக் களைந்தருளும் ஸ்ரீமஹாகாலரின் ப்ரிய நாயகியாகவும், எவர்கள் உன்னை எப்போழுதும் த்யானிக்கிறர்களோ அவர்கள் எவ்விடத்திலும், யாவராலும் பயபக்தி விஶ்வாஸத்துடனும் மிக்க மரியாதையுடனும் பெரிதும் கௌரவிக்கப்பட்டு விமரிசையாக உபசரிக்கப்படுவர்.

वदामस्ते किं वा जननि वयमुच्चैर्जडधियो
न धाता नापीशो हरिरपि न ते वेत्ति परमम् ।
तथापि त्वद्भक्तिर्मुखरयति चास्माकमसिते
तदेतत् क्षन्तव्यं न खलु पशुरोषस्समुचितः ॥ ९ ॥

வதாமஸ்தே கிம் வா ஜனனி வயமுச்சைர்ஜடதியோ
3 3 3
ந தாதா நாபீஶோ ஹரிரபி ந தே வேத்தி பரமம் ।
4
ததாபி த்வத்பக்திர்முகரயதி சாஸ்மாகமஸிதே
2 3 4 2
ததேதத் க்ஷந்தவ்யம் ந கலு பஶுரோஷஸ்ஸமுசித: ॥ 9 ॥
3 2

தாயே! எந்த மஹா ஜ்ஞானிகளாலும், அதிஶய ஸூக்ஷ்ம புத்திமான்களாலும் ஊஹித்துப் பார்க்க முடியாதபடி அவ்வளவு அளவு கடந்த ப்ரபாவ மஹிமை உள்ளவளே! இவ்வளவு மஹாமந்தமான புத்தியுள்ள நாங்கள் உன்னுடைய

மஹோன்னதமான பரதத்துவத்தைப் பற்றியும் உன்னுடைய அதிஸூக்ஷ்ம ஶக்தி-களைப் பற்றியும் ஒரு லவலேஶமேனும் எவ்வாறு எடுத்துக்கூற முடியும்! ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்ரர்கள் கூட உன்னுடைய பெருமைகளின் உண்மையான நிலையைப் பற்றி சிறிதும் அறியார்களே! ஆயினும் புல்லறிவாளர்களாயினும் எங்களுக்கு உன்பால் உள்ள அளவு கடந்த ப்ரேமையானது உன்னைப்பற்றி ஏதேதோ கொச்சை கொச்சையாக பிதற்றத்தூண்டுகிறது. ஆதலால் இவ்வளவு ஜடப்பிறவிகளாகிய எங்களது இந்தச் சிறு குற்றத்தைத் தயவு செய்து மன்னித்தருளவேண்டும். அன்னையே! எங்களைப்போல் அறிவில்லாத ஜந்துக்களின் மீது கோபங்கொள்வது உன்னைப் போன்ற பெரியோர்களுக்குத் தகுதியல்லவே.

समान्तादापीनस्तनजघनधृग्यौवनवती-
रतासक्तो नक्तं यदि जपति भक्तस्तव मनुम् ।
विवासास्त्वां ध्यायन् गलितचिकुरस्तस्यवशगा-
स्समस्तास्सिद्धौघा भुवि चिरतरं जीवति कविः ॥ १० ॥

ஸமந்தாதாபீன ஸ்தநஜகனத்ருக் யௌவனவதீ
3 4 4 3
ரதாஸக்தோ நக்தம் யதி ஜபதி பக்தஸ்தவ மநும் ।
3 4
விவாஸாஸ்த்வாம் த்யாயன் கலிதசிகுரஸ் தஸ்ய வஶகாஸ்-
4 3 3
ஸமஸ்தாஸ் ஸித்தௌகா புவி சிரதரம் ஜீவதி கவி : ॥ 10 ॥
3 4 4 4

நன்ருகப் பரந்து விரிந்த தன் கேஶங்களுடனும். உடலில் வஸ்த்ரமே இல்லாத நிலையில் அமர்ந்து கொண்டும், எவனேனும் உனது பக்தனொருவன் நன்ருகப் பருத்து உருண்டு திரண்ட ஸ்தனபாரங்களும் இடுப்பும் கொண்ட யௌவனப் பருவ மங்கையான ப்ரிய நாயகியுடன் இரவில் இணைந்து இன்புறும் வேளையில், உனது மூல மந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை உனது ஸ்வரூப த்யானத்தில் நன்ருக ஆழ்ந்த வண்ணம் ப்ரேமையுடன் ஜபிப்பானேயாகில் அவன் எல்லா ஸித்திகளும் தன் வஶமாகக் கிடைக்கப் பெற்று பெரும் ப்ரஹ்மஜ்ஞானியாகவும், சிரஞ்ஜீவியாகவும் ஜீவன் முக்தனுகவும் இப்பூவுலகில் இனிது வாழ்வான்.

[குறிப்பு: —இக்த ஶ்லோகத்தில் லயயோகம் விவரிக்கப்படுகிறது. "உடலில் வஸ்த்ரம் இல்லாமல்" என்பதும் "பரந்த கேசங்களுடன்" என்பதும் "உபாஸகன் மனதில் குணங்களின் வியாபாரம் இல்லாமல்" அதாவது "விருப்பு வெறுப்பு முதலிய பண்புகளற்ற நிலையில்" என்று பொருள்படும். "தன் ப்ரியநாயகி" என்பது குண்டலினீ ஶக்தியைக் குறிக்கும். குண்டலினி ஶக்திதான் இஷ்ட தேவதை "இரவில்" என்பது யோகநிஷ்டை அவஸரத்தில்" என்று பொருள்படும்* மேற்-

---

*या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ —பகவத்கீதை II-69

குறித்த சொற்களெல்லாம் பரிபாஷைப் பதங்கள்—அவற்றின் நைகண்டுக அர்த்தங்களை அப்படியே நேரிட க்ரஹிக்கக்கூடாது.]

समास्स्वस्थीभूतो जपति विपरीतो यदिसदा
विचिन्त्य त्वां ध्यायन्नतिशयमहाकालसुरताम् ।
तदा तस्य क्षोणीतलविहरमाणस्य विदुषः
कराम्भोजे वश्यास्स्मरहरवधूसिद्धिनिवहाः ॥ ११ ॥

ஸமாஸ்ஸ்வஸ்தீ2பூ4தோ ஜபதி விபரீதோ யதி3 ஸதா3 ।
விசிந்த்ய த்வாம் த்4யாயன்னதிஶயமஹாகால ஸுரதாம் ॥
ததா3 தஸ்ய க்ஷோணீதலவிஹரமாணஸ்ய விது3ஷ: ।
கராம்போ4ஜே வஶ்யாஸ்ஸ்மரஹரவதூ4ஸித்3தி4நிவஹா: ॥

எவனேனும் ஒரு பக்தன் குண்டலினீ ஶக்தியின் வீர்யமான ஓட்டத்தின் வீறு கொண்ட லய யோகத்தில் ஆழ்ந்து, மூழ்கி நேரம் பொழுதெல்லாம் பாராமல் ஸதாகாலமும் அதிலேயே லயித்தவனாக, ஸ்ரீ மஹாகாலருடன், உன் ஶக்தியே மேலோங்கி இயங்க நீ இரண்டறக் கலந்து ஆழ்ந்து இன்புறும் நிலையையே இடையறாது ப்ரேமையுடன் த்யானித்த வண்ணம் வித்யாராஜ்ஞியைப் பலவருஷ-காலம் ஜபிப்பானேயாகில், அவன் ஆதிபராஶக்தியாகிய உனது ஸாந்நித்யமும், அநுக்ரஹமும், ஶக்தியும் விரவிய எல்லா மஹாஸித்திகளும் தன் கைவஶமாகக் கிடைக்கப் பெற்று இப்பூவுலகில் மஹாஜ்ஞானியாக நெடுங்காலம் இனிது வாழ்வான்.

प्रसूते संसारं जननि भवती पालयति च
समस्तं क्षित्यादि प्रलयसमये संहरति च ।
अतस्त्वं धातासि त्रिभुवनपतिश्श्रीपतिरपि
महेशोऽपि प्रायस्सकलमपि किं स्तौमि भवतीम् ॥ १२ ॥

ப்ரஸூதே ஸம்ஸாரம் ஜனனி ப4வதீ பாலயதி ச
ஸமஸ்தம் க்ஷித்யாதி3 ப்ரலயஸமயே ஸம்ஹரதி ச ।
அதஸ்த்வம் தா4தாஸி த்ரிபு4வனபதிஶ்ஶ்ரீபதிரபி
மஹேஶோऽபி ப்ராயஸ்ஸகலமபி கிம் ஸ்தௌமி ப4வதீம் ॥ 12 ॥

தாயே! இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டி பண்ணுவதும் நீயே; ரக்ஷிப்பதும் நீயே; ப்ரளய காலத்தில் இப்பூமி முதலான எல்லாவற்றையும், அழிப்பதும் நீயே. ஆதலின் நீதான் ப்ரஹ்மா; இம்மூவுலகங்களையும் காக்கும் லக்ஷ்மீபதியான நாராயணனும் நீதான். ருத்ரனும் நீதான், சுருங்கக் கூறினால் சேதனுசேதன ப்ரபஞ்சம் எல்லாவற்றின் வ்யக்தாவ்யக்த மூர்த்தியும் நீதான். அவ்வெல்லாவற்றின் அதிகாரிணியும், அத்யக்ஷையும் ஆக ஸர்வமும் நீயேதான் அல்லவோ? அப்படி-யிருக்க, ஜகதாம்பிகே எளியனை அடியேன் எப்படி உன் முழுமையான ஸ்வரூபத்தைக் கூறித்துதிக்க முடியும்.

अनेके सेवन्ते भवदधिकगीर्वाणनिवहान्
विमूढास्ते मातः किमपि न हि जानन्ति परमम् ।
समाराध्यामाद्यां हरिहरविरिञ्च्यादिविबुधैः
प्रपन्नोऽस्मि स्वैरं रतिरसमहानन्दनिरताम् ॥ १३ ॥

அநேகே ஸேவந்தே பவததிககீர்வாணநிவஹான்
4 3 4 3
விமூடாஸ்தே மாத: கிமபி ந ஹி ஜானந்தி பரமம் ।
4
ஸமாராத்யாமாத்யாம் ஹரிஹரவிரிஞ்ச்யாதிவிபுதை:
4 3 3 3 4
ப்ரபன்னோऽஸ்மி ஸ்வைரம் ரதிரஸமஹாநந்தநிரதாம் ॥ 13 ॥
3

தாயே! பலர் உன்னைத் தவிர இன்னும் பல்வேறு தேவதைகளை, அவர்கள் உன்னைக்காட்டிலும் மேலானவர்கள் என்ற தவறான எண்ணத்துடன் உபாஸிக்-கிறார்கள். அவர்கள் யாவரும் பெரும் மூடர்கள், பரதத்துவத்தைச் சிறிதும் அறியாதவர்கள். ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்ரர்கள் முதலான எல்லாத்தேவர்களாலும் விசேஷமாக ஆராதிக்கப்படுபவளும் உன் ப்ரிய நாயகரான ஸ்ரீமஹாகாலருடன் இரண்டறக்கலந்து ஸதாகாலமும் பேரின்பம் அனுபவிப்பதிலேயே மகிழ்ந்திருப்ப-வளும், ஆதிபராசக்தியுமான உன்னை நான், பிறரின் தூண்டுதலுக்காக அல்லாமல் நானே என் ஸ்வயமான ஆர்வமேலீட்டால் உன்னைச் சரணமடைந்து விட்டேன்.

धरित्री कीलालं शुचिरपि समीरोऽपि गगनं
त्वमेका कल्याणी गिरिशरमणी कालि सकलम् ।
स्तुतिः का ते मातर्निजकरुणया मामगतिकं
प्रसन्ना त्वं भूया भवमनु न भूयान्मम जनुः ॥ १४ ॥

தரித்ரீ கீலாலம் ஶுசிரபி ஸமீரோऽபி ககனம்
4 3 3
த்வமேகா கல்யாணீ கிரிஶரமணீ காலி ஸகலம் ।
3

ஸ்துதி: காதே மாதர்நிஜகருணயா மாமக3திகம்

ப்ரஸன்னா த்வம் பூ4யா ப4வமநு ந பூ4யான்மம ஜநு: ॥ 14 ॥

ஸ்ரீமஹாகாலரின் ப்ரிய நாயகியான ஹே காலிகே! ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாஸம் ஆகிய பஞ்ச பூதங்கள் எல்லாமும் நீயே. வ்யக்தாவ்யக்தமானதும், சேதனா சேதனமானதும் ஆன இந்த ப்ரபஞ்சம் முழுமையும் நீயேதான், நீ ஒருத்தியே தான் இவ்வெல்லாமும். விஸ்வ மங்கல மூர்த்தியும் நீயேதான். தாயே! எனக்கு வேறு கதி இல்லே. என் மீது இரக்கம் கொண்டு உன் அபார கருணா விலாஸத்தால் எனக்கு இனி பிறவி இல்லா வரம் கொடுத்தருள், என் அன்புத்தாயே!

श्मशानस्थस्स्वस्थो गलितचिकुरो दिक्पटधर-

स्सहस्रं त्वर्काणां निजगलितवीर्य्येण कुसुमम् ।

जपंस्त्वत्प्रत्येकं मनुमपि तव ध्याननिरतो

महाकालि स्वैरं स भवति धरित्रीपरिवृढः ॥ १५ ॥

ஸ்மஸானஸ்த2ஸ்ஸ்வஸ்தோ2 க3லிதசிகுரோ தி3க்பட த4ரஸ்-

ஸஹஸ்ரம் த்வர்க்காணாம் நிஜக3லிதவீர்ய்யேண குஸுமம் ।

ஜபம்ஸ்த்வத்ப்ரத்யேகம் மநுமபி தவ த்4யான நிரதோ

மஹாகாலி ஸ்வைரம் ஸ ப4வதி த4ரித்ரீ பரிவ்ருட4: ॥ 15 ॥

ஹே மஹாகாலிகே! எவனேனும் ஒரு பக்தன், தன் த்யான யோக சாதனையில் நிர்குணமான நிலையில் உன் ஸ்வரூபத்தையே இடைபருது சிந்தித்துக் கொண்டு, தன் மயமான ப்ரேம தியானத்தில் ஆழ்ந்த வண்ணம், ஆயிரக்கணக்கான ஆவ்ருத்தியாக உன் மூல மந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை ஜபித்துக் கொண்டே, ஒவ்வொரு மந்த்ராவ்ருத்திக்கும் ஒரு புஷ்பம் வீதம் ஆயிரக்கணக்கான எருக்கம் புஷ்பங்களை உன் பாத கமலங்களில் அர்ப்பணம் செய்து கொண்டே, தன் அவிச்சின்ன ஸ்மரணத்தில் அகுல ஸஹஸ்ரார கமலத்தில் ப்ரஹ்மரந்திரத்தினூடே குண்டலினீ ஸக்தியுடன் இணைந்து ஒன்றியதின் இன்ப நுகர்ச்சியில் மூழ்கிய படியாகவே ஆழ்ந்து உனது ஸ்வரூப தியானத்தின் வீர்யத்தால் மகிழ்ந்த சந்த்ரனுடைய கருணையால் சரிந்தொழுகும் அம்ருத தாரையையும் உனக்கே அர்ப்பணம் செய்து மகிழ்வானேயாகில், அவன் இந்த உலகுக்கே ஏக சக்ராதிபதியாகி சிரஞ்ஜீவியாக இனிது வாழ்வான்.

गृहे सम्मार्जन्या परिगलितवीर्य्यं हि कुसुमं

समूलं मध्याह्ने वितरति चितायां कुजदिने ।

समुच्चार्य प्रेम्णा मनुमपि सकृत्कालि सततं
गजारूढो याति क्षितिपरिवृढस्सत्कविवरः ॥ १६ ॥

க்3ருஹே ஸம்மார்ஜன்யா பரிகலித3வீர்ய்யம் ஹ்ரி குஸுமம்
ஸமூலம் மத்4யாஹ்னே விதரதி சிதாயாம் குஜதி3னே ।
ஸமுச்சார்ய்ய ப்ரேம்ணா மநுமபி ஸக்ருத்காலி ஸததம்
க3ஜாரூடோ4 யாதி க்ஷிதிபரிவ்ருட4ஸ்ஸத்கவிவர: ॥ 16 ॥

ஹே காலிகே! எவனேனும் ஒரு பக்தன் செவ்வாய்க்கிழமையன்று நள்ளிரவில் யோக நிலையில் மஹாஸ்மஶானமாகிய ப்ரஹ்மரந்த்ர கமலத்தில், குண்டலினீ ஶக்தியுடன் இரண்டறக் கலந்திணைந்த சேர்க்கையின் வீர்ய்யத்தால் கசிந்தொழுகும் புஷ்பாஸவ மகரந்த ஸ்ராவத்தை உனது அழகிய ஸ்வரூபத்தின் ப்ரேம தியானத்தில் ஆழ்ந்தபடியாக, உனது மூலமந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை ஓர் ஆவ்ருத்தியாவது தன்மயத்வ பாவத்துடன் ஜபித்து உனக்கு அர்ப்பணம் செய்வானேயாகில், அவன் இந்த உலகத்திற்கே பேரரசனாகி, சிறந்த ஆத்ம ஜ்ஞானியாகவும், எவ்விடத்தும் எஞ்ஞான்றும் யானை மீதேறிச் செல்பவனாகவும், நெடுங்காலம் வீறுடன் ஆனந்த மூர்த்தியாக வாழ்வான்.

स्वपुष्पैराकीर्णं कुसुमधनुषो मन्दिरमहो
पुरो ध्यायन् ध्यायन् जपति यदि भक्तस्तवमनुम् ।
स गन्धर्वश्रेणीपतिरपि कवित्वामृतनदी
नदीनः पर्य्यन्ते परमपदलीनः प्रभवति ॥ १७ ॥

ஸ்வபுஷ்பைராகீர்ணம் குஸுமத4நுஷோ மந்தி3ரமஹோ
புரோ த்4யாயன் த்3யாயன் ஜபதி யதி3 ப4க்தஸ்தவமநும் ।
ஸ க3ந்த4ர்வஶ்ரேணீபதிரபி கவித்வாம்ருதநதீ3
நதீ3ன: பர்ய்யந்தே பரமபத3லீன: ப்ரப4வதி ॥ 17 ॥

எவனேனும் ஒரு பக்தன் யோகநிலையில் மூலாதார கமலத்தின் மத்தியில் த்ரிகோணாகாரமான யோனிமண்டலத்தில் உள்ள ஸ்வயம்பூலிங்க புஷ்பங்கள் பரக்க இறைந்து பரிமளம் வீச, மனோரமணீயமாக அமர்ந்திருக்கும் காமதேவனின் ஸாந்நித்யத்தால் ஆநந்தமயமாக ஆகர்ஷிக்கும் இந்த ஸ்தலத்தைத் தன் அகக்கண்-முன் பாவனையால் இருத்திக் கொண்டு இடையறாது தியானித்துக்கொண்டே அங்கு

உன் ஸ்வரூபத்தைப் பிரதிஷ்டை செய்து, அதன் ப்ரேம சிந்தனத்துடன் வித்யாராஜ்ஞியைத் தொடர்ந்து ஜபிப்பானேயாகில் ஆஹா! அவன் கானத்தில் □ஹாஹா, ஹூஹூ, விஶ்வாவஸு, தும்புரு, சித்ரரதன் முதலான கந்தர்வர்களுக்கெல்லாம் தலைவனாகவும், கவித்வமாகிய அம்ருத ஸாகரத்துக்கு ஒப்பானவனாகவும், நெடுங்காலம் கம்பீரமாக இனிது வாழ்ந்து, கடைசியில் பரமபதமாகிய உன் ஸாந்நித்தியமும் பெற்று ஜீவன் முக்தனாகி விடுவான்.

त्रिपञ्चारे पीठे शवशिवहृदि स्मेरवदनां
महाकालेनोच्चैर्मदनरसलावण्यनिरताम् ।
समासक्तो नक्तं स्वयमपि रतानन्दनिरतो
जनो यो ध्यायेत्त्वामयि जननि स स्यात्स्मरहरः ॥ १८ ॥

த்ரிபஞ்சாரே பீடே ஶவஶிவஹ்ருதி ஸ்மேரவதனாம்
மஹாகாலேனோச்சைர்மதனரஸலாவண்யநிரதாம் ।
ஸமாஸக்தோ நக்தம் ஸ்வயமபி ரதானந்தநிரதோ
ஜனோயோ த்யாயேத்த்வாமயி ஜனனி ஸ ஸ்யாத்ஸ்மரஹர: ॥ 18 ॥

தாயே! எவனேனும் ஒரு பக்தன் நள்ளிரவில் யோகநிலையில் குண்டலினீ ஶக்தியுடன் அன்யோன்யமாக இசைந்து கலந்திருக்கையில், பதினைந்து கோணங்களாலான, அதாவது ஐந்து த்ரிகோணங்களால் உருவான சக்ர ரூபத்திலுள்ள* பீடத்தின் மீது செயலற்றுச் சவரூபமாகக் கிடக்கும் ஸ்ரீமஹாகாலரின் ஹ்ருதயத்தில் அமர்ந்து ஆனந்தச் சிரிப்புடன் அவருடன் இணைப்புப் பிணைப்பில் ஒன்றிய ஸம்யோக அவஸரத்தில் ஆழ்ந்து மகிழ்ந்திருக்கும் உனது இன்ப ஸ்வரூபத்தையே தொடர்ந்து ஆழ்ந்து தியானித்துக் கொண்டே அதிலேயே மூழ்கி, தன் தேகமே அந்த யந்த்ரமாவதை உணர்ந்து உணர்ந்து, தன் ஹ்ருதயத்தில் லீலா விநோதமாக அமர்ந்துள்ள உனது ஆனந்தமூர்த்தியையே சிந்தித்து மகிழ்வானேயாகில் அவன் ஸ்வயமாகவே ஸாக்ஷாத் ஸ்ரீமஹாகாலராகி விடுவான். இது திண்ணம்.

सलोमास्थि स्वैरं पललमपि मार्जारमसिते
परं चौष्ट्रं मैषं नरमहिषयोश्छागमपि वा ।

---

□गानात्परतरं न हि ॥

*आदौ षट्कोणमारभ्य त्रिकोणत्रितयं ततः ।
पद्ममष्टदलं बाह्ये भूपुरं तत्र पूजयेत् ॥ —காலீதந்த்ரம்

बलिन्ते पूजायामयि वितरतां मर्त्यवसतां
सतां सिद्धिस्सर्वा प्रतिपदमपूर्वा प्रभवति ॥ १९ ॥

ஸலோமாஸ்தி ஸ்வைரம் பலலமபி மார்ஜ்ஜாரமஸிதே
2
பரம் ஔஷ்ட்ரம் மைஷம் நரமஹிஷயோஶ்சாகமபிவா ।
3 3
பலிந்தே பூஜாயாமயி விதரதாம் மர்த்யவஸதாம்
3
ஸதாம் ஸித்திஸ்ஸர்வா ப்ரதிபதமபூர்வா ப்ரபவதி ॥ 19 ॥
3 4 3 4

எல்லாக் கட்டுப்பாடுகளையும் மீறிய பூர்ண ஸ்வதந்திர மூர்த்தியே! கரிய சாயலுடன் ஜ்வலிக்கும் பேரழகியே! என் தாயே! விவேக மற்ற ஜடர்கள் வாழும் இந்தப்பாமர சமூகத்தில் இருந்து கொண்டே ஸாத்விக ஞானம் ஸித்திக்கப்பெற்ற விவேகிகளான உன் பக்தர்கள் உன் மீது பொங்கிய ப்ரேமையின் ஓட்டத்தால், எலும்பு, ரோமம் முதலியவை நீக்கப்படாமல் முழுமையாகவே பூனை, ஒட்டகம், செம்மறி ஆடு, மனிதன், எருமைக்கடா, வெள்ளாடு ஆகியவற்றின் மாமிசத்தை தம் சொந்தமான விருப்பத்தின் மேலீட்டால், பூஜை வேளையில், உனக்குப் பலியிடுவார்களேயாகில், மோக்ஷ பதவியை நோக்கி அவர்கள் செய்யும் உபாஸன புரஶ்சரண க்ரமங்கள் எல்லாம் அத்யாஶ்சர்யமாகவும், ஸித்தி கிடைக்கப் பெற்றுப் பூர்ணபலம் அடைந்து மகிழ்வார்கள்.

[குறிப்பு—மேற்கூறிய பூனை, ஒட்டகம், எருமைக்கடா முதலிய சொற்களெல்லாம் பரிபாஷைப் பதங்கள். அவற்றின் நைகண்டுக அர்த்தங்களை அப்படியே க்ரஹிக்கக்கூடாது. "வெள்ளாடு" என்ற சொல் காமத்தைக் குறிக்கிறது. "எருமைக்கடா" என்ற சொல் க்ரோதத்தைக் குறிக்கிறது. "பூனை" என்பது லோபத்தைக் குறிக்கிறது. செம்மறி ஆடு என்பது மோஹத்தைக் குறிக்கிறது. "நரன்" என்பது மதத்தைக் குறிக்கிறது. "ஒட்டகம்" என்பது மாத்ஸர்யத்தைக் குறிக்கிறது.]

वशी लक्षं मन्त्रं प्रजपति हविष्याशनरतो
दिवा मातर्युष्मच्चरणयुगलध्याननिरतः ।
परं नक्तं नग्नो निधुवनविनोदेनच मनुं
जनो लक्षं स स्यात्स्मरहरसमानः क्षितितले ॥ २० ॥

வஶீ லக்ஷம் மந்த்ரம் ப்ரஜபதி ஹவிஷ்யாஶநரதோ
திவா மாதர்யுஷ்மச்சரணயுகலத்யான நிரத: ।
3 3 4
பரம் நக்தம் நக்னோ நிதுவன விநோதேன ச மநும்
3 4 3
ஜனோ லக்ஷம் ஸ ஸ்யாத்ஸ்மரஹரஸமான: க்ஷிதிதலே ॥ 20 ॥

தாயே! எவனேனும் ஒரு பக்தன் தன் இந்த்ரியங்களின் ஓட்டத்தை முற்றிலும் அடக்கிக் கொண்டு பகலில் உப்பில்லாமல் சமைத்த ஓதனத்தை உட்கொண்டு, உனது திருவடித்தாமரையையே த்யானித்துக் கொண்டு உனது மூலமந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை ஜபித்து லக்ஷக்கணக்கில் ஆவ்ருத்தி ஸங்க்யை உரு ஏற்றிக் கொண்டு இரவில் யோகநிலையில் குண்டலினீ ஶக்தியுடன் ஐக்யாவஸ்தையில் ஒன்றிய வண்ணம் நிர்க்குணமான நிலையில் இருந்து கொண்டு, மேலும் லக்ஷக்கணக்கான அந்த மஹோன்னதமான மந்த்ர ரத்னத்தை ஜபிப்பானேயாகில், அவன் இவ்வுலகில் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாகாலருக்கு ஒப்பாக நெடுங்காலம் இனிது வாழ்வான்.

इदं स्तोत्रं मातस्तव मनुसमुद्धारणजप-
स्वरूपाख्यं पादाम्बुजयुगलपूजाविधियुतम् ।
निशार्द्धे वा पूजासमयमधि वा यस्तु पठति
प्रलापस्तस्यापि प्रसरति कवित्वामृतरसः ॥ २१ ॥

இதம் ஸ்தோத்ரம் மாதஸ்தவ மநுஸமுத்தாரணஜப-
ஸ்வரூபாக்யம் பாதாம்புஜயுகலபூஜாவிதியுதம் ।
நிஶார்த்தே வா பூஜாஸமயமதி வா யஸ்து படதி
ப்ரலாபஸ்தஸ்யாபி ப்ரஸரதி கவித்வாம்ருதரஸ: ॥

தாயே! எவனேனும் ஒரு பக்தன் உனது மூலமந்த்ரமாகிய வித்யாராஜ்ஞீ உருவாகும் வகையை விளக்குவதும், அதனை ஜபிக்கும் விதிமுறையை விஸ்தரிப்பதும், உனது திவ்ய மங்கல ஸ்வரூபத்தை வர்ணித்து விளக்குவதும், உனது திவ்யசரணாரவிந்தங்களில் செய்யவேண்டிய பூஜை பத்ததியை விளக்கிக் கூறுவதும் ஆன இந்த ஸ்தோத்ர ரத்னத்தை நள்ளிரவிலோ, பூஜை நிகழும் வேளைகளிலோ ஶ்ரத்தையுடன் ஸுஸ்வரமாகப் பாராயணம் செய்வானேயாகில், அவனுடைய பிதற்றலான ஏதேனும் சில சொற்கள் கூட கவிதையாகிய அம்ருத தாரையாக ப்ரவஹித்து கேட்போரை மகிழ்விக்கும்.

कुरङ्गाक्षीबृन्दं तमनुसरति प्रेमतरलं
वशस्तस्य क्षोणीपतिरपि कुबेरप्रतिनिधिः ।
रिपुः कारागारं कलयति च तं केलिकलया
चिरञ्जीवन्मुक्तस्स भवति सुभक्तः प्रतिजनुः ॥ २२ ॥

குரங்காக்ஷீப்ருந்தம் தமநுஸரதி ப்ரேமதரலம்
வஶஸ்தஸ்ய க்ஷோணீபதிரபி குபேரப்ரதிநிதி: ।

ரிபு: காராகாரம் கலயதி ச தம் கேலிகலயா
3
சிரஞ்ஜீவன் முக்தஸ்ஸ பவதி ஸுபக்த: ப்ரதிஜனு: ॥ 22 ॥
4 4

அத்தகைய பாக்கியசாலியான பக்தனிடம் அளவு கடந்த ப்ரேமை கொண்டு மான்விழியராகிய அழகிய பெண்கள் பலர் கூட்டங்கூட்டமாகிக் குழுமி, அவனுடைய அன்புக்காக விழைந்து போட்டியிட்டுக் கொண்டு அவனையே சூழ்ந்து பின் தொடர்வார்கள். நாட்டை ஆளும் அரசனும் அவனுக்கு வசமாகி, அவனது விருப்பங்களைப் பூர்த்தி செய்து வைப்பான்-அவன் குபேரனுக்குச் சமானமான ஐச்வர்யம் படைத்தவனாக மிகக் கௌரவமாக வாழ்வான், சத்ருக்கள் அவனைக் கண்ட மாத்திரத்தில் சிறைச்சாலையைக் கண்டு நடுங்குவது போல் அஞ்சுவார்கள் - லீலாவிநோதமாகவே அவன் இப்பூவுலகில் நெடுங்காலம் காளீ பக்தனாக ஆனந்த ஸாகரத்தில் மூழ்கி ஜீவன் முக்தனாக வாழ்வான்-அவனுக்கு இனி ஜன்மம் கிடையாது.

குறிப்பு:—''அழகிய பெண்கள் அவனை விரும்பிச் சூழ்ந்து பின் தொடர்வார்கள்'' என்று கூறியதானது ''குண்டலினீ யோகத்தில் ஆழ்ந்த அவனைத் தேவி பராசக்தியாகிய ஸ்ரீதக்ஷிண காளிகையும், அவனைச் சூழ்ந்த பரிவார சக்தி-தேவதைகளும் தம் கருணைகடாக்ஷங்களால் பெரிதும் மகிழ்விப்பார்கள்'' என்று பொருள்படும்.

इति श्रीकालीतन्त्रे श्रीमन्महाकालविरचितं श्रीकर्पूरस्तोत्रं समाप्तम् ॥

இதி ஸ்ரீகாலீதந்த்ரே ஸ்ரீமன் மஹாகாலவிரசிதம் ஸ்ரீகர்ப்பூர ஸ்தோத்ரம் ஸமாப்தம்.

இங்ஙனமாக ஸ்ரீகாலீ தந்த்ரத்தில், ஸ்ரீமஹாகாலர் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீகர்ப்பூர ஸ்தோத்ரம் முற்றிற்று.

---

अहिंसा परमं पुष्पं पुष्पमिन्द्रियनिग्रहः ।
दया पुष्पं क्षमा पुष्पं ज्ञानपुष्पं च पञ्चमः ।
इत्युक्तैरुत्तमैः पुष्पैः पूजयेत् परदेवताम् ॥

—உத்தர தந்த்ரம்.

குறிப்பு :— அஹிம்ஸை, இந்த்ரிய நிக்ரஹம், தயை, பொறுமை, ஞானம் என்ற இந்த ஐந்து புஷ்பங்களைக் கொண்டு செய்யும் பூஜை உயர்ந்ததாகும்.

---

# श्रीदक्षिणकालिकापराधक्षमापणस्तोत्रम् ॥

# ஸ்ரீ தக்ஷிணகாலிகாபராதக்ஷமாபண ஸ்தோத்ரம்
3 4

பக்தன் இஷ்ட தேவதையாகிய தக்ஷிணகாலிகையிடம் இந்த ஜன்மத்தில் தான் இதுவரை தெரிந்தும் தெரியாமலும் செய்த பலகுற்றங்களை எல்லாம் நன்குணர்ந்து ஒன்றன் பின் ஒன்றாக எடுத்துக்கூறி அவற்றிற்கெல்லாம் தேவியின் மன்னிப்புக்கோரி தன் அனன்ய ஶரணாகதியைத் தெரிவித்து விஜ்ஞாபனம் செய்யும் நூல் இது.

प्राग्देहस्थो यदाहं तव चरणयुगं नाश्रितो नार्चितोऽहं
तेनाद्याकीर्तिवर्गैर्जठरजदहनैर्बाध्यमानो बलिष्ठैः ।
क्षिप्त्वा जन्मान्तरान्नः पुनरिह भविता क्वाश्रयः क्वापि सेवा
क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ १ ॥

ப்ராக்தேஹஸ்தோ யதாஹம் தவசரணயுகம் நாஶ்ரிதோ நார்ச்சிதோऽஹம்
3 3 2 3 3
தேனாத்யாகீர்த்திவர்க்கைர் ஜடரஜதஹனைர் பாத்யமானோ பலிஷ்டை: ।
3 3 2 3 4 3 3 2
க்ஷிப்த்வா ஜன்மாந்தரான்ன: புனரிஹ பவிதா க்வாஶ்ரய: க்வாபி ஸேவா
4
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 1 ॥
4 3

ஆதியில் நான் இந்த ஜன்மம் எடுக்கும்போது என் தாயின் கர்ப்பத்தில் இருந்த காலத்தில் உன் பாதகமலங்களுக்குப் பூஜை செய்து உன்னைச் சரணமடையவில்லையே! ஶிஶுவாய் இப்புவியில் ஜனித்த வேளையிலிருந்து ஜாடராக்னியாகிய பசியால் கடுமையாகப் பாதிக்கப்பட்டும் பூர்வஜன்ம கர்மாக்களின் பயனாக இன்னும் பல்வேறு வகைகளிலும் பீடிக்கப்பட்டும், இப்படியாக ஊழின் சூழலில் சிக்குண்ட எனக்கும் என்போன்ற புல்லறிவாளர்க்கும் புனருஜ்ஜீவனம் எப்படி கிடைக்கப் போகிறது? தேவியே! உன்னைச் சரணமடைந்து உனக்கு முறைப்படி உபாஸன க்ரமத்தில் அமைந்த சீரிய ஆராதனை முதலான மங்கலப்ரதமான உன் ஸேவை செய்துய்ய எனக்கு வாய்ப்புக் கிடைக்குமா?

ஆயினும் அதிஜாஜ்வால்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு பிரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணேகாலிகே! மாத்ருகாஸ்வரூபிணியே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல

இழைத்து விட்டேன். என்னை உன் அபார கருணாவிலாஸத்தால் மன்னித்தருள வேண்டும் ஜகதம்பிகே!

बाल्ये बालाभिलापैर्जडितजडमतिर्बाललीलाप्रसक्तो
न त्वां जानामि मातः कलिकलुषहरां भोगमोक्षप्रदात्रीम् ।
नाचारो नैव पूजा न यजनकथा न स्मृतिर्नैव सेवा
क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ २ ॥

பா3ல்யே பா3லாபி4லாபைர்ஜடி3தஜட3மதிர்பா4லலீலாப்ரஸக்தோ
ந த்வாம் ஜானாமி மாத: கலிகலுஷஹராம் போ3க3மோக்ஷப்ரதா3த்ரீம் ।
நாசாரோ நைவ பூஜா ந யஜனகதா3 ந ஸ்ம்ருதிர்நைவ ஸேவா
க்ஷந்தவ்யோ மேऽபராத4: ப்ரகடிதவத3னே காமரூபே கராலே ॥ 2 ॥

தாயே! பால்ய வயதில் இளஞ்சிறூர்களுடன் கூடிக்கொண்டு, சிறுபிள்ளைப் பருவத்திய பொறுப்பற்ற பல்வகை விளையாட்டுப் பேச்சுக்கள் பேசிக்காலங்கழித்துக் கொண்டும், ஜட புத்திக்காரனாக பாலலீலைகளிலேயே மோஹங்கொண்டும், பொழுதெல்லாம் வீணாக்கினேன். கலியின் தோஷங்களைக் களைந்து பக்தர்களுக்கு இஹபோக சுகவாழ்வும் இறுதியில மோக்ஷமும் அளித்தருளும் கருணாமூர்த்தியான உன் சிறப்பியல்புகளைக் கொஞ்சம்கூடத் தெரிந்து கொள்ளாத மூடனாகிவிட்டேனே! ஸ்ம்ருதிகளில் திட்டமிட்ட ஆசார முறைப்படி நித்ய நைமித்திக கர்மானுஷ்டானத்துடன் தூய வாழ்க்கை நடத்தினேனா? இல்லையே! விதிப்படி உனது ஆவரண பூஜைகளும் உபசார வரிவஸ்யாக்ரம பூஜைகளும் நிகழ்த்தவில்லையே! உனது மூலமந்த்ர ஹோமாதி யஜ்ஞங்கள் தர்ப்பணங்கள் முதலியன ஒன்றும் செய்யவில்லையே! உனது த்யானம், ஜபம், பாராயணம், தர்ஶனம், யோகினிகளின் ஸமாராதனம், ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் முதலிய ஸேவைகள் எதுவும் நான் செய்தறியேனே! ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு பிரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகாஸ்வருபிணியே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபார கருணாவிலாஸத்தால் மன்னித்தருளவேண்டும். ஜகதம்பிகே!

प्राप्तोऽहं यौवनं चेद्विषधरसदृशैरिन्द्रियैर्दष्टगात्रो
नष्टप्रज्ञः परस्त्रीपरधनहरणे सर्वदा साभिलाषः ।
त्वत्पादाम्भोजयुग्मं क्षणमपि मनसा न स्मृतोऽहं कदापि
क्षन्तव्यो मोऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ ३ ॥

ப்ராப்தோऽஹம் யௌவனம் சேத்விஷதரஸத்ருஶைரிந்த்ரியைர்தஷ்டகாத்ரோ
3 4 3 3 3 3

நஷ்டப்ரஜ்ஞ: பரஸ்த்ரீபரதனஹரணே ஸர்வதா ஸாபிலாஷ: ।
4 3 4

த்வத்பாதாம்போஜயுக்மம் க்ஷணமபி மனஸா ந ஸ்ம்ருதோऽஹம் கதாபி
3 4 3 3

க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 3 ॥
4 3

யௌவனப்பருவம் அடைந்தபோது, கொடிய விஷப்பாம்புகளுக்கொப்பான இந்த்ரியங்களால் பீடிக்கப்பட்டு விஷயாதி ஸுகாநுபவத்திலேயே என் பொருளையும் ஶரீர ஶக்தியையும் பொன்னான பொழுதையும் வீணாக்கிக் கொண்டு, நிதானமிழந்து மேலும் மேலும் ஸுகாநுபவ வேட்கையின் தீவிரத்தில் கார்யாகார்யம் என்று எதையும் யோசித்துப் பாராமல், என் இன்பநுகர்ச்சிக்குத் தேவையான பொருளடைய பிறர் பொருளையும், பிறஸ்த்ரீகளையும் கூடத்திருடித்திருடி அனுபவித்துக் கொண்டு இங்ஙனம் அக்ருத்யங்களை அஞ்சாமல் செய்து கொண்டே காலங்கழித்தேன். இதனால் உன் பாதாரவிந்தங்களை ஒரு கணமேனும் நினைத்துப் பார்த்தது கூடக் கிடையாது. ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிண காலிகே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய பல குற்றங்கள் இழைத்துவிட்டேன். என்னை உன் அபாரகருணா விலாஸத்தால் மன்னித்தருள வேண்டும், ஜகதம்பிகே!

प्रौढो भिक्षाभिलाषी सुतदुहितृकलत्रार्थमन्नादिचेष्टः
क्व प्राप्स्ये कुत्र यामीत्यनुदिनमनिशं चिन्तयामग्नदेहः ।
नो ते ध्यानं न चास्था न च भजनविधिर्नामसङ्कीर्त्तनं वा
क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ ४ ॥

ப்ரௌடோ பிக்ஷாபிலாஷீ ஸுததுஹித்ருகலத்ரார்த்தமன்னாதிசேஷ்ட:
4 4 4 3 2 3

க்வ ப்ராப்ஸ்யே குத்ர யாமீத்யநுதினமனிஶம் சிந்தயாமக்னதேஹ: ।
4 3 3

நோ தே த்யானம் ந சாஸ்தா ந ச பஜனவிதிர்நாமஸங்கீர்த்தனம் வா
4 2 4 4

க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 4 ॥
4 3

க்ருஹஸ்தனாகி நல்ல வளர்ச்சியான பருவத்தில் மனைவி மக்களுக்காக அன்ன வஸ்த்ராதி யோகக்ஷேமங்களை ஸம்பாதிக்கும் ப்ரயாஸைகளிலேயே அனவரதமும் தீவிரமாக ஈடுபட்டு அதெல்லாம் சரிவரக் கிடைக்காததால் ''ஆஹா! நான் எங்கு செல்வேன்! யாரை அணுகுவேன்! மேற்கொண்டு எந்த நிலைக்குச் சென்று கொண்டிருக்கிறேன்? என்றெல்லாம் நாள்தோறும் இரவும் பகலுமாகக் கவலைகளிலேயே மூழ்கிக் கிடந்து காலத்தையெல்லாம் வீணாக்கிவிட்டேனே தவிர, உனது திவ்ய

மங்கல ஸ்வரூபத்தைக் கொஞ்சமேனும் த்யானித்தேனு? உனது வழிபாட்டில் சிறிதேனும் பொருந்தி நிலைத்தேனு? உனது திருநாமங்களை மனமார உச்சரித்து ஆனந்தபரமான நாமஸங்கீர்த்தனம் ஸுஸ்வரமாகவும், மதுரமாகவும் செய்து மகிழ்ந்தேனு? இவை எல்லாம் எதுவும் நான் செய்ததில்லையே! இதெல்லாமும் என் பாபந்தானே!

ஆயினும் அதி ஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு பிரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபார கருணவிலாஸத்தால் மன்னித்தருள வேண்டும்! ஜகதம்பிகே!

वृद्धत्वे बुद्धिहीनः कृतविवशतनुश्श्वासकासातिसारैः
कर्मानर्होऽक्षिहीनः प्रगलितदशनः क्षुत्पिपासातिभूतः ।
पश्चात्तापेन दग्धो मरणमनुदिनं ध्येयमात्रं न चान्यत्
क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ ५ ॥

வ்ருத்தத்வே புத்திஹீன: க்ருதவிவஶதநுஶ்ஶ்வாஸகாஸாதிஸாரை:
கர்மாநர்ஹோऽக்ஷிஹீன: ப்ரகலிததஶன: க்ஷுத்பிபாஸாதிபூத:।
பஶ்சாத்தாபேன தக்தோ மரணமநுதினம் த்யேயமாத்ரம் ந சான்யத்
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 5 ॥

வயோதிக தசையில் நல்லது எது கெட்டது எது என்று பகுத்தறிந்து பாகு-படுத்தித் தெளியும் புத்திஶக்தி இழந்து, ஸ்வாஸ காஸம் அதிஸாரம் முதலிய கொடிய நோய்களால் பீடிக்கப்பட்டு, உடல் மெலிந்து வலிமை சரிந்து வளம் குறுகி, மனத்-தெம்பு குன்றி, கண்பார்வை அற்று, பற்கள் தேய்ந்து ஒடிந்து விழுந்து போய், பசி தாகம் மேலிட்டு, உடலாலான காரியங்கள் செய்ய சக்தியற்றவனுகி, தன் முற் செயல்களை நினைந்து நினைந்து மனம் நைந்து நொந்துபோய் நாளுக்கு நாள் விரைந்து நெருங்கிக் கொண்டிருக்கும் மரணத்தைப் பெரும் பீதியுடன் அநுதினமும் எதிர் நோக்கிய வண்ணம் அதையே நினைத்து நடுங்கிக்கொண்டு, வேறென்றையும் நினைத்துப்பார்க்கக்கூட சக்தியும் நேரமும் இல்லாமல் காலத்தையெல்லாம் வீணு-கவே கழித்து விட்டேனே! ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு பிரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமாமூர்த்தியான என்தாயே! நான் அறியாமல் மேற்-கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபார கருண விலாஸத்தால் மன்னித்தருள வேண்டும், ஜகதம்பிகே!

कृत्वा स्नानं दिनादौ क्वचिदपि सलिलं नाकृतं नैवपुष्पं
ते नैवेद्यादिकं च क्वचिदपि न कृतं नापि भावो न भक्ति: ।
न न्यासो नैव पूजा न च गुणकथनं नैव चर्चा कृता ते
क्षन्तव्यो मेऽपराध: प्रकटितवदने कामरूपे कराले ॥ ६ ॥

க்ருத்வா ஸ்நானம் தினதௌ க்வசிதபி ஸலிலம் நாக்ருதம் நைவபுஷ்பம்
3 3 3
தே நைவேத்யாதிகம் ச க்வசிதபி ந க்ருதம் நாபி பாவோ ந பக்தி: ।
3 3 3 4 4
ந ந்யாஸோ நைவ பூஜா ந ச குணகதனம் நைவ சர்ச்சா க்ருதா தே
3 2
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 6 ॥
4 3

அதிகாலையில் எழுந்திருந்து ப்ராதஸ்நானம் செய்து என்றைக்காவது உனக்கு த்யானுவாஹனம், அர்க்ய, பாத்யம், அபிஷேகம் புஷ்ப குங்குமார்ச்சனை முதலிய உபசார வரிவஸ்யா ஆராதன க்ரமங்கள் ஏதாவது செய்தேனு? அல்லது த்யான தாரண பாவனுதி யோகம் செய்தேனு? அல்லது உனது வழிபாட்டு க்ரமங்களில் அனன்ய சரணுகதி பாவத்துடன் பக்தி செலுத்தினேனு? அங்கந்யாஸாதி கரந்யா-ஸாதி பூர்வகமாக பூஜாக்ரமங்கள் ஏதேனும் செய்தேனு? அல்லது பல ஆஸ்திகர்கள் மனதில் பக்திபாவம் பொங்கிப் பெருகும் வகையில் உனது பிரபாவ குணச் சிறப்பியல்புகளை எடுத்து விளக்கிக்கூறி உபந்யாஸம் செய்தேனு? அல்லது உனது தத்வ மஹிமைகளின் ஸூக்ஷ்மங்களை விரிவாகவும் ஆழமாகவும் விமர்ஶித்து ஆராய்ந்து வித்வத் ஸமூஹங்களில் பரப்பினேனு? இதொன்றும் நான் செய்யாமலேயே என் ஜன்மம் பூராவும் வீணுகப் போய்விட்டதே!

ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு ப்ரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபாரகருணு விலாஸத்தால் மன்னித்தருள வேண்டும், ஜகதம்பிகே!

जानामि त्वां न चाहं भवभयहरणीं सर्वसिद्धिप्रदात्रीं
नित्यानन्दोदयाढ्यां त्रितयगुणमयीं नित्यशुद्धोदयाढ्याम् ।
मिथ्याकर्माभिलाषैरनुदिनमभित: पीडितो दु:खसङ्घै:
क्षन्तव्यो मेऽपराध: प्रकटितवदने कामरूपे कराले ॥ ७ ॥

ஜானுமி த்வாம் ந சாஹம் பவபயஹரணீம் ஸர்வஸித்திப்ரதாத்ரீம்
4 4 3 4 3
நித்யானந்தோதயாட்யாம் த்ரிதயகுணமயீம் நித்யஶுத்தோதயாட்யாம் ।
3 3 4 3 3 4 3 4
மித்யாகர்மாபிலாஷைரநுதினமபித: பீடிதோ து:கஸங்கை:
2 4 3 4 3 4 2 4
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 7 ॥
4 3

ஸம்ஸாரபயத்தைப் போக்குபவளும், எல்லா ஸித்திகளையும் வரையாது வழங்கியருள்பவளும், நிலைத்த ஆனந்தத்துக்கு இருப்பிடமானவளும், ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களே உருவான ஸகுணப்ரஹ்ம மூர்த்தியும், ஶாஸ்வதமான ஶுத்த புத்த முக்தானந்த ஸ்வரூபிணியும் ஆன உனது உண்மை-யான விராட் ஸ்வரூபத்தை உள்ளபடி நன்கு உணர்ந்து சிறிதளவு கூட நான் த்யானம் செய்யாமல் போய்விட்டேனே! பொய்யான நிலையாத சிற்றின்ப நுகர்ச்சி-யின் அல்ப இச்சைகளாலும், அவற்றால நிஶ்சயமாய் விளையும் கொடிய துன்பங்-களாலும், அன்றாடம் காலாவகைகளிலும் பீடிக்கப்பட்டு வருந்தலானேனே தவிர, நித்யானந்த ரூபிணியும் கருணைக்கடலும் ஆன உன்னை நான் த்யானிக்கவில்லையே! ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு ப்ரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமா-மூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபாரகருணை விலாஸத்தால் மன்னித்தருளவேண்டும், ஜகதம்பிகே!

कालाभ्रश्यामलाङ्गीं विगलितचिकुरां खड्गमुण्डाभिरामां
त्रासत्राणेष्टदात्रीं कुणपगणशिरोमालिनीं दीर्घनेत्राम् ।
संसारस्यैकसारां भवजननहरां भावितो भावनाभि:
क्षन्तव्यो मेऽपराध: प्रकटितवदने कामरूपे कराले ॥ ८ ॥

காலாப்ரஶ்யாமலாங்கீம் விகலிதசிகுராம் கட்கமுண்டாபிராமாம்
4 3 3 2 3 3 3 4
த்ராஸத்ராணேஷ்டதாத்ரீம் குணபகணஶிரோமாலினீம் தீர்க்கநேத்ராம் ।
3 3 3 4
ஸம்ஸாரஸ்யைகஸாராம் பவஜனனஹராம் பாவிதோ பாவநாபி:
4 4 4 4
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 8 ॥
4 3

நீருண்ட மேகம் போல கரிய சாயலுடன் அழகிய அங்கங்கள் கொண்டு ஜ்வலிப்பவளும்; கட்டிலடங்காமல் பரக்க விரிந்து தொங்கும் கேஶஜாலங்களுடன் ப்ரகாசிப்பவளும் தனது இடது மேற்கரத்தில் "பத்ராத்மஜன்" என்ற அழகியதொரு கட்கமும், இடது கீழ்க்கரத்தில நரமுண்டமும், வலது மேற்கரத்தில அபய முத்திரை

யும், வலது கீழ்க்கரத்தில் வரத முத்திரையும் தரித்திருப்பவளும்; ஶவங்களின் ஶிரஸ்ஸுகளாலான மாலை அணிந்திருப்பவளும், ஸாம்ஸாரிக ஜீவர்கள் சுழன்-றுழலும் இந்த ப்ரபஞ்சத்தில் அலைந்து வருந்தும் தொல்லைகளினின்று விடுதலை பெற அடைக்கலம் புகத்தக்க ஒரே ஶரண்ய தேவதையாக உள்ளவளும்; இந்த ஸம்ஸார சக்கரத்தில் சிக்குண்டு தவிக்கும் பக்தர்கள் இனியும் மறுபிறவி எடுக்காத வண்ணம் தடுத்தாட் கொண்டருளும் வள்ளலும் ஆன அநுக்கிரஹ மூர்த்தியாகிய உன்னை நான் ஶரணமடைவதாக பாவனைகள் பண்ணினேனே தவிர உன்னை உறுதியாகப் பற்றிச் சரணடையவில்லையே!

ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு ப்ரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமா மூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபாரகருணா விலாஸத்தால் மன்னித்தருள வேண்டும் ஜகதம்பிகே!

ब्रह्मा विष्णुस्तथेश: परिणमति सदा त्वत्पदाम्भोजयुग्मं
भाग्याभावान्न चाहं भवजननि भवत्पादयुग्मं भजामि ।
नित्यं लोभप्रलोभै: कृतविवशमति: कामुकस्त्वां प्रयाचे
क्षन्तव्यो मेऽपराध: प्रकटितवदने कामरूपे कराले ॥ ९ ॥

ப்ரஹ்மா விஷ்ணுஸ்ததேஶ: பரிணமதி ஸதா த்வத்பதாம்போஜயுக்மம்
பாக்யாபாவான்ன சாஹம் பவஜனனி பவத்பாதயுக்மம் பஜாமி ।
நித்யம் லோபப்ரலோபை: க்ருதவிவஶமதி: காமுகஸ்த்வாம் ப்ரயாசே
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 9 ॥

ஸம்ஸாரிகளைக் கரையேற்றி அருளும் ஜகன்மாதாவே! ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதி ஸகல தேவர்களும் எப்பொழுதும் உன் பாதகமலங்களை வணங்கிப் பூஜிக்கின்றனர். அந்த பாக்கியம் எனக்கு இல்லாததால நான் உன திருவடித்தாமரை-களைச் சரணமடைந்து வழிபடவே இல்லையே! அதற்கு மாருக அன்றுடம் காமக்ரோ-தாதிகளின் வசப்பட்டு மதியிழந்து ஒரே வாக்காக ஆசைப்பேய்க்கிரையாகி முற்றி-லும் நலிந்துபோனபின் உன்னை யாசிக்க வந்திருக்கிறேன்.

ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு பிரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன், என்னை உன் அபாரகருணா விலாஸத்தால் மன்னித்தருள வேண்டும், ஜகதம்பிகே!

रागद्वेषैः प्रमत्तः कलुषयुततनुः कामनाभोगलुब्धः
कार्य्याकार्य्याविचारो कुलमतिरहितः कौलसङ्घैर्विहीनः ।
क्व ध्यानं ते क्व चर्चा क्वच मनुजपनं नैव किञ्चित्कृतोऽहं
क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ १० ॥

ராகத்வேஷை: ப்ரமத்த: கலுஷயுததநு: காமனாபோகலுப்த:
3 3 4 3 3 4
கார்யாகார்யாவிசாரீ குலமதிரஹித: கௌலஸங்கைர்விஹீன: ।
4
க்வ த்யானம் தே க்வ சர்ச்சா க்வச மநுஜபனம் நைவ கிஞ்சித்க்ருதோऽஹம்
4
க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 10 ॥
4 3

விருப்பு வெறுப்புக்களாகிய போதைக்கிரையாகி மனங்கலங்கி உடல் நொந்துபோய், கலவி இன்ப நுகர்ச்சியிலேயே ஸதாகாலமும் உளைந்து "இது செய்யத்தக்கது—இது செய்யத் தகாதது" என்ற விவேகமான விசாரணை இல்லாமல் மனம் போனபடி அலைந்து சீரழிந்து, மிகப்புனிதமான உனது வழிபாட்டின் மேலான க்ரமங்களின் விதிமுறைகளில் கொஞ்சம் கூட ஈடுபாடு இல்லாமலும் உனது உபாஸகர்களின் குழுக்களுடன் சிறிதுகூட ஸஹவாஸம் இல்லாமலேயே காலங்கழித்துக் கொண்டிருந்தேனே தவிர நான் உனது திவ்ய மங்கல ஸ்வரூபத்தை என்றைக்காவது த்யானம் செய்து மகிழ்ந்தேனா? உனது பரதத்வத்தைப்பற்றி எப்பொழுதாவது ஏதாவது சர்ச்சை செய்து தெளிந்தேனா? உனது மஹோந்நதமான மூலமந்த்ரமாகிய வித்யாராஜ்ஞியை ஜபித்து உயர்ந்தேனா? இது ஒன்றும் நான் இதுவரை செய்யவில்லையே!

ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு ப்ரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாலிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமா மூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபார கருணாவிலாஸத்தால் மன்னித்தருள வேண்டும், ஜகதம்பிகே!

रोगी दुःखी दरिद्रः परवशकृपणः पांशुल पापचेताः
निद्रालस्यप्रसक्तस्सुजटरभरणे व्याकुलः कल्पितात्मा ।
किं ते पूजाविधानं त्वयि क्वयि क्व च नु मतिः क्वानुरागः क्व चास्था
क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ ११ ॥

ரோகீ து:கீ தரித்ர: பரவஶக்ருபண: பாம்ஶுல பாபசேதா:
3 3 2 3 3
நித்ராலஸ்யப்ரஸக்தஸ்ஸுஜடரபரணே வ்யாகுல: கல்பிதாத்மா ।
3 4

**கிம் தே பூஜாவிதானம் த்வயி க்வ ச நு மதி: க்வாநுராக: க்வ சாஸ்தா**
4 3 2

**க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமரூபே கராலே ॥ 11 ॥**
4 3

என் வாழ்நாள் முழுவதும் பலவகை வியாதிகளால் பீடிக்கப்பட்டவனாகவும் மனதில் பல துன்பங்கள் அடைந்தவனாகவும் பரமதரித்திரனாகவும் பிறர் உடைமைகளை அடைய முயல்வதிலேயே கண்ணும் கருத்துமாக உள்ள பரமலோபியாகவும், மனதிலும் உடலிலும், பல அழுக்குகள் நிறைந்தவனாகவும், கெட்ட பேச்சும் இழிவான நடத்தையும் கொண்டு பாபத்திலேயே புத்தி உள்ளவனாகவும், பல வகையான பாபச்செயலகள் புரிபவனாகவும், எப்பொழுதும் நித்திரையிலேயே காலங்கழிக்கும் சோம்பேறியாகவும், ஸதாகாலமும் பெரும் வ்யஸனங்கள் மேலிட்டவனாகவும், எப்பொழுதுமே வயிற்றுக்குப் பெருந்தீனி போடுவதிலேயே குறியாக இருப்பவனாகவும், இப்படியெல்லாம் இழிவான வாழ்க்கை நடத்தினேனே தவிர, உனக்கு எப்பொழுதாவது ஏதாவது பூஜைகள் செய்தேனா? உனது மஹாமங்கள ஸ்வரூபத்தை ப்ரேமையுடன் சிந்திக்கும் த்யான க்ரமங்களில் கொஞ்சமாவது ஈடுபட்டேனா? இது ஒன்றும் லவலேசமும் நான் செய்யவே இல்லையே!

ஆயினும் அதிஜாஜ்வல்யமான ஜ்யோதிஸ்ஸுடன் ஜ்வலிக்கும் முககமலம் கொண்டு ப்ரகாசிக்கும் பேரழகியே! ஸ்ரீதக்ஷிணகாளிகே! மாத்ருகா ஸ்வரூபிணியே! க்ஷமாமூர்த்தியான என் தாயே! நான் அறியாமல் மேற்கூறிய குற்றங்கள் பல இழைத்து விட்டேன். என்னை உன் அபார கருணா விலாஸத்தால் மன்னித்தருள வேண்டும், ஜகதம்பிகே!

**मिथ्याव्यामोहरागैः परिवृतमनसः क्लेशसङ्घान्वितस्य**
**क्षुन्निद्रौघान्वितस्य स्मरसुविरहिणः पापकर्मप्रवृत्तेः ।**
**दारिद्र्यस्य क्व धर्मः क्व च जननरुचिः क्व स्थितिस्साधुसङ्घैः**
**क्षन्तव्यो मेऽपराधः प्रकटितवदने कामरूपे कराले ॥ १२ ॥**

**மித்யாவ்யாமோஹராகை: பரிவ்ருதமனஸ: க்லேஶஸங்கான்விதஸ்ய**
2 3 4

**க்ஷுந்நித்ரௌகான்விதஸ்ய ஸ்மரஸுவிரஹிண: பாபகர்மப்ரவ்ருத்தே: ।**
3 4

**தாரித்ர்யஸ்ய க்வ தர்ம க்வ ச ஜனனருசி: க்வ ஸ்திதிஸ்ஸாதுஸங்கை:**
3 3 4 2 4 4

**க்ஷந்தவ்யோ மேऽபராத: ப்ரகடிதவதனே காமருபே கராலே ॥ 12 ॥**
4 3

பொய்த்தோற்றங்களே மலிந்த இந்த மாயாஜால ப்ரபஞ்சத்தில் காமக்ரோதாதிகளால், உண்டாக்கப்பட்ட மயக்கங்களும் குழப்பங்களுமே மனதில் நிறைவாகச் சூழப்பட்டவனாகவும், பலவகையான துன்பங்களால் இடையறாது பீடிக்கப்பட்ட-

